ஸ்ரீ:

விசதவாக் சிகாமணியான

ஸ்ரீமணவாளமாமுனிகள் அருளிச்செய்த

(ஜீயர்படி)

# பகவதாராதன க்ரமம்



ஸ்ரீ உ. வே. வித்வான் திருவங்காரணை ப்ரஸன்ன

ஸ்ரீநிவாஸவரதாசாரிய ஸ்வாமி அருளிச்செய்த

## ஜீயர்படி விளக்கம்



மயிலை. கொ. பட்டாபிராம முதலியாரால்

சென்னை

ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ்ஸில் பதிப்பிக்கப்பெற்றது.

1932

ஸ்ரீ:

# மதிப்புரை.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் உ, வே, வித்வான்
அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் எழுதுவது.

ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அவசியமாகச் சொல்லப்பட்ட விதிகளில் "பஞ்சகால பராயணத்வம்" என்பது மிக முக்கியமாகவும் சிறந்ததாகவும் வைதிக சாஸ்திரங்களில் வகுக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ குலசேகரப் பெருமாளும் தமது அருளிச்செயலில் "இருமுப் பொழுதேத்தி யெல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான அறந்திகழுமனத்தவர் தங் கதியை" என்று அருளிச் செய்துள்ளார். பஞ்சகால பராயணர்களை எம்பெருமான் கைவிடாது காத்தருள்பவனென்றபடி. ஆகவே ஸ்ரீ வைஷ்ணவர்களனைவரும் பஞ்சகாலபராயணர்களாக இருத்தல் முறைமையாகும். அஃதாவது என்னெனின்; ஸூர்யோதயம் முதல் ஸூர்யாஸ்தமனம் வரையில் உள்ள முப்பது நாழிகையை ஐந்து பாகமாக வகுத்து, ஒவ்வொரு ஆறு நாழிகையை ஒவ்வொரு காலமாகக் கூறிட்டு, முறையே (1) ப்ராத:காலம் (2) ஸங்கவகாலம் (3) மத்யாஹ்நகாலம் (4) அபராஹ்நகாலம் (5) ஸாயாஹ்நகாலம் என ஐந்து காலமாகப் பேரிட்டு தினப்படியாக அந்த ஒவ்வொரு காலத்திலும் அநுஷ்டிக்கவேண்டிய காரியங்களையும் சாஸ்திரங்களே கூறியிருக்கின்றன. அவையாவன:—அபிகமநம், உபாதாநம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் என ஐந்து ஒழுக்கங்களாம். ஸ்நானம், ஸந்த்யாவந்தனம் ஜபம், முதலிய காலைக் கடன்களைச் செய்து முடித்த பின் தான் திருவாராதனம் ஸமர்ப்பிக்க வேண்டிய எம்பெருமானது ஸந்நிதியிற் சென்று தண்டன் ஸமர்ப்பித்து ஸ்தோத்திரம் முதலியவற்றால் எம்பெருமானை உகப்பித்தல் முதலாறு நாழிகையாகிய ப்ராதக் காலத்திற்குரிய அபிகமந அநுஷ்டானமாகும்.

அதற்கு அடுத்த ஸங்கவகாலத்திலே எம்பெருமானுடைய திருவாராதனத்திற்கு வேண்டிய சுத்ததீர்த்தம், சந்தனம், புஷ்பம், தூபதீப த்ரவ்யங்கள் முதலியவற்றையும் போஜ்யாஸநத்திற்கு

உரிய போஜநோபகரணங்களையும் ஸம்பாதித்துத் தொகுத்து வசித்தப்படுத்த வேண்டும்; இதுவே 'உபாதாந அநுஷ்டாந' மெனப்படும்.

இனி, மூன்றுவது காலமாகிய மத்யாஹ்நகாலத்திற்கு உரிய 'இஜ்யா' என்கிற அநுஷ்டானம் கவனிக்கத்தக்கது. அதாவது மாத்யாஹ்நிக ஸ்நாநமும் மாத்யாஹ்நிகச் சடங்கும் செய்து விதிமுறைவழுவாது பகவானுக்குத் திருவாராதனம் ஸமர்ப்பித்துப் பக்குவமான உணவுகளை அமுது செய்வித்து அங்ஙனம் நிவேதனம் செய்த உணவுகளை அதிதிகளுடன் புஜிப்பதாம். இதற்கடுத்த காலங்களில் மோக்ஷ மார்க்கத்துக்கு உரிய வேத வேதாந்த வேதாங்கங்களையும் இதிஹாஸ புராணங்களையும் மற்றும் உரிய நூல்களையும் தாம் அதிகரித்தலும் பிறர்க்கு அதிகரிப்பித்தலும் செய்துபோந்து, ஸாயம் ஸந்த்யாவந்தந ஜபாதிகளையும் முடித்து இரவு போஜநாநந்தரம் ஏகாந்தமாக இருந்து ஐம்பொறிகளை யடக்கி ப்ராணாயாமஞ் செய்து மனத்தைப் பரமபுருஷனிடத்தே நிலைநிறுத்தி பகவத் குணாநுஸந்தானத்தோடு பள்ளிகொள்ள வேண்டும்.

இப்படிப்பட்ட பஞ்சகால நியமங்களுள் நன்னடுவேயுள்ள இஜ்யாகால நியமம் ஒவ்வொரு ஸ்ரீ வைஷ்ணவராலும் அவசியம் பரிபாலனம் செய்யவுரியது. "திருவாராதன மில்லாதவனில்லத்தில் திரு ஒருநாளும் வாழாள்" என்பர் பெரியோர். எந்த காரியத்தை லோபம் செய்தாலும் திருவாராதனத்தை மாத்திரம் கூடிய மட்டில் ச்ரத்தையாக நடத்தியே புஜிக்கவேண்டும். "செய்வன திருந்தச் செய்" என்பவாதலால் அந்தத் திருவாராதனத்தை மனம் போனபடி செய்திடாமல் பூருவர்கள் காட்டின திருத்தமான நெறியிலே நின்று நடத்துதலே எம்பெருமான் திருவுள்ளத்திற்குப் பாங்காகுமென்பர் பெரியோர்.

எம்பெருமானர், வங்கிப்புரத்துநம்பி, ஸ்ரீபராசரபட்டர் முதலான பூருவாசாரியர்கள் அருளிச்செய்துள்ள திருவாராதன ப்ரயோகநூல்கள் வடமொழியிலுள்ளன வாதலாலும் மிகவிரிவாதலாலும் நம்போலியரிடத்துப் பரம கருணைபூண்ட ஸ்ரீ மணவாளமாமுனிகள் மணிப்ரவாள நடையில் அருளிச்செய்தருளிய 'ஜீயர்படி' என்று நாடு நகரமும் நன்கறிந்த திருவாராதன ப்ரயோகமே பெரும்

பார்தும் ஸ்ரீ வைஷ்ணவர்களின் திருமாளிகையில் அநுஷ்டானத்தில் வருவதால் அதை விளக்கமான வுரையுடன் வெளியிட வேணு மென்று பல பாகவதோத்தமர்களின் நியமனத்தை சிரஸாவஹித்த ஸ்ரீமான். ஸ்ரீ வைஷ்ணவ சிகாமணியாகிய பட்டாபிராம முதலியார் இதனை வெளியிட்டுள்ளார்.

இது ஸ்ரீ வைஷ்ணவர்களனைவர்க்கும் மிகப் பயன்படுமாதலால் அனைவரும் இதனை ஆதரித்து அதிகரித்து எம்பெருமானுக்கு முக மலர்த்தியான திருவாராதன க்ரமத்தில் ஊன்றியிருப்பார்களாக.

இங்ஙனம்,

காஞ்சீ-ப்ர. அண்ணங்கராசார்யர்.

---:o:---

# விஷய ஸூசிகை

## ஜீயர்படி விளக்கம்



### அநுபந்தம்.





ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விஞ்ஞாபனம்.

இவ்வுலகிலுள்ள ஆஸ்திகர்களனைவரும் முக்கியமாக கவனிக்கவேண்டிய விஷயமொன்றுண்டு. அதாவது (ஞானேனஹீன: பசுபி: ஸமான:) என்றபடி அஞ்ஞானிகளாயிராமல், ஸகல லோகங்களுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு மூலகாரணமாயிருப்பவனும், தங்களுக்கு சகலவிதமான நன்மைகளை உண்டாக்குமவனுமான ஸர்வேச்வரனுடைய ஸ்வரூப, ரூப, குணங்களைத் தெரிந்துகொண்டு அவனிடத்தில் பக்தி செய்வதற்காக தங்கள் ஞானத்தை உபயோகப்படுத்தவேண்டும்.

ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபம் ஐந்து விதம்.

(1) பரத்வம். — ப்ராக்ருதமண்டலத்தை கடந்ததாயும் அழிவற்றதாயுமுள்ள பரமபதத்தில் தேஜோமயமாய் ஆனந்தரூபியாயிருந்துகொண்டு நித்ய முக்தர்களுக்கு எப்பொழுதும் பரமானந்தத்தை அளித்துக்கொண்டிருக்குமிருப்பு.

(2) வ்யூஹம். — ப்ராக்ருதமான ப்ரம்மாண்டங்களை ஸ்ருஷ்டித்து அந்த மண்டலங்களுக்குள் தேவ, மனுஷ்ய, திர்யக், ஸ்தாவரம் முதலான எல்லா ஜீவராசிகளுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்கள் பொருட்டும் தன்னை உபாஸிப்பவர்களை அநுக்ரஹிப்பதற்காகவும் "வாஸுதேவன்" "ஸங்கர்ஷணன்" முதலான நாமங்களுடனும், அவைகளுக்குத்தகுந்த குணவிசேஷங்களுடனுமிருக்கும் ஸ்திதி.

(3) விபவம். — துஷ்டர்களைக்கொன்று சிஷ்டர்களை பரிபாலிப்பதற்காகவும், தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவும் இவ்விபூதியிலுள்ளோர்க்கு ஸஜாதீயனாய் தன்னிஷ்டத்தால் பரிக்ரஹிக்கப்பட்ட ராம க்ருஷ்ணாத்யவதாரங்கள்.

(4) அந்தர்யாமித்வம். — அந்தந்த ப்ராணிகள் செய்யும் புண்யபாபங்களை உள்ளபடி அறிவதற்காகவும், அந்த புண்யபாபங்களுக்குத்தக்கபடி நன்மை தீமைகளையுண்டாக்குவதற்காகவும் யோகிகளுடைய எண்ணத்தை நிறைவேற்றுவதற்காகவும் பிராட்டி (லக்ஷ்மி) யுடனும் திவ்யமான ரூபத்துடனும் ஸகலப்ராணிகளின் ஹ்ருதய கமலத்திலிருந்துகொண்டு அவைகளின் ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளை ஸதா பார்த்துக்கொண்டிருக்குமிருப்பு.

(5) அர்ச்சாவதாரம். — ஆச்ரிதர்களுகந்த ரூபத்துடனும நாமத்துடனும், அவர்களால் ஏற்படுத்தப்பட்ட சிலை அல்லது லோஹ விக்ரஹங்களில் ஸர்வஜ்ஞனுயும் ஸர்வ சக்தியுடனும், ஸகல கல்யாண குணங்களுடனுமிருக்குமிருப்பு.

சர்வேச்வரனிடத்தில் செய்கிற பக்தியானது அதிகரித்தால் பகவத்விஷயத்தில் கிஞ்சித்தாவது கைங்கர்யம் செய்தாலொழிய தரிக்கமுடியாதபடியாயிருக்கும். கைங்கர்யம்தான் மானஸிகமென்றும், வாசிகமென்றும், காயிகமென்றும் மூன்று விதம்.

(1) மானஸிகம். — பகவத் விஷயத்தில் உள்ளமுருகி சில கைங்கரியங்களை காயிகமாக (கைகால் முதலான அவயவங்களினல்) செய்ய சக்தியில்லாமற்போனலும் "கைங்கர்யங்களைச்செய்ய சக்தியற்றவனக இருக்கிறேனே" என்று அநுதபித்துக்கொண்டு சக்தியிருக்கும் பக்ஷத்தில் தான் செய்யக்கூடிய கைங்கர்யங்களை செய்வதாக பாவித்து, புளகீக்ருத காத்ரனயிருக்கை.

ஒருஸ்வாமி தினந்தோறும் ராத்ரி வேளையில் ஏகாந்தமான ஸ்தலத்திலுட்கார்ந்துகொண்டு பெரியபெருமாளுக்கு திவ்யமான ப்ராகாரங்களும், சன்னிதியும் மனதினல கட்டிக்கொண்டிருக்க அவருடைய கடைசி காலத்தில் பெருமாள் 'இராவீடு கட்டினவனுக்கு மேல் வீடுதந்தோம்' என்றருளிச்செய்ததாக ஓர் ஐதிஹ்யமுண்டு.

(2) வாசிகம். — மானஸிகமான அநுபவம் பண்ணமுடியாமற்போனல் 'ஜிஹ்வே கீர்த்தய கேசவம்' என்றபடி நாப்படைத்த ப்ரயோஜனத்தைப்பெருவதற்காக பூர்வர்களிட்டருளிய ப்ரபந்தங்களை ஸதா அநுஸந்தித்துக்கொண்டு ஸர்வேச்வரனுக்கு ஸதா பல்லாண்டு பாடிக்கொண்டிருக்கை.

(3) காயிகம். — தனக்குள்ள ஸகல த்ரவ்யங்களையும், ஸன்னிதிகளை ஏற்படுத்தல், எம்பெருமானுக்கு நித்யோத்ஸவம், பக்ஷோத்ஸவம் முதலான உத்ஸவங்களைச்செய்தல் பாகவதர்களுடைய யோக க்ஷேமங்களை கவனித்து ஆராதித்தல் முதலான கைங்கரியங்களில் உபயோகப்படுத்துதல். 'ஒழிவில் காலமெல்லாம் உடனய் மன்னி வழுவிலா வடிமை செய்ய வேண்டும் நாம்' என்று ஆழ்வார் ப்ரார்த்தித்தபடி தான் இவ்விபூதியிலுள்ள வரையிலும் தனது தேஹேந்திரியங்களை பகவத் பாகவத விஷயங்களில் உப

யோகப்படுத்துதல் (அதாவது திவ்யமானசந்தனம் சேர்த்துசமர்ப்பித்தல், மாலைகளைத்தொடுத்து சாற்றுதல் முதலான கைங்கர்யங்களைச்செய்தல்).

இக்கைங்கர்யங்கள் மூன்றையும் செய்து நிறம் பெருவது அர்ச்சாவதாரத்தில்தான் சாத்யம். இதற்கு காரணம் மற்ற அவதாரங்கள் தேசாந்தர காலாந்தரங்களில் இருப்பதும் சில கண்ணுக்கு தோற்றாமையும்தான்.

இந்த ரூபங்களைந்திலும் அர்ச்சாவதாரம் மிகவும் புகழத்தக்கது. (அர்ச்சாவதார விஷயே மயாப்யுத்தேஶதே ஸ்ததா உக்தா குணனசக்யந்தே வக்தும் வர்ஷ சதைரபி) என்று பாத்மபுராணத்தில் கூறியபடி ஸ்வதந்த்ரர்வஞ்ஞன தானே சொல்லப்புகுந்தாலும் சொல்லுவதற்கு மிகவும் அரிதாகும்படியானது அர்ச்சாவதார குண பூர்த்தி. (அர்ச்ச: = அர்ச்சிதும் யோக்ய:—ஆராதிப்பதற்கு யோக்யமான அவதாரம்.)

மேலும், வேதத்தில் ப்ரம்மத்யானமே மோக்ஷத்திற்கு முக்கியமான உபாயமென்று கூறப்பட்டிருக்கிறது. அப்பரப்ரம்மத்தின் ரூபம் லோக விலக்ஷணமாக விருப்பதால் கர்மபத்தர்களான இவ்வாத்மாக்களின் கண்ணுக்கு எட்டாததாயிருக்கும். பாஞ்சராத்திரம் முதலான ஆகம க்ரந்தங்களில் கூறியபடி அர்ச்சா திருக்கோலங்களை (விக்ரஹங்களை) ஏற்படுத்தி அவைகளை ஸதா த்யானம் பண்ணிக்கொண்டிருந்தால் நாளடைவில் மனஸ்ஸு சுத்தியாய் சில நாளைக்கெல்லாம் பகவத் ஸாக்ஷாத்காரமுண்டாகும் அந்த ஸாக்ஷாத்காரத்தால் புண்ய பாபங்களிரண்டையும் ஒழித்துக்கொண்டு மோக்ஷத்தை அடைவான்.

அர்ச்சாவதாரம் அஞ்ஞானிகளோடு ஞானிகளோடு வாசியற ஸகலரும் ஆச்ரயித்து உஜ்ஜீவிப்பதற்கு தக்கதாயிருக்கிறது. ‘நம்மால் ஏற்படுத்தப்பட்ட விக்ரஹங்களுக்கு ஞானசக்திகளேது நாம் விரும்பும் பலங்களை எப்படியளிக்கும்’ என்பர் சிலர். அவ்விஷயத்தைப்பற்றி இங்குவிவரிப்பது அஸாத்யமாகையால் ஸங்க்ரஹமாக எழுதப்படும். அர்ச்சாவிக்ரஹங்களில் பக்த்யாதிகள் செய்வதனால் நாம் விரும்பும் பலங்களையடையக்கூடும் என்பது அடியில் கண்ட த்ருஷ்டாந்தங்களால் நன்கு விளங்கும்.

(1) ஒரு ஸ்த்ரீ தேசாந்தரத்திற்குச்சென்றிருக்கும் தன் கணவனுடைய படத்தை ஸதா பார்த்துக்கொண்டு, அப்பிரிவின் மூலமாக வுண்டாகும் துக்கத்தை அதனால் ஒருவாறாக போக்கிக் கொண்டிருந்தால் அதைத்தெரிந்து கொண்டு பர்த்தா அவளிடத்தில் விசேஷ ப்ரீதியைசெய்வானல்லவா அவன் அப்படி ப்ரீதிசெய்வதற்கு காரணம் அவள் அவனையே ஸதா வாய்புலத்திக்கொண்டிருந்ததும் அவனிடத்தில் செய்ய வேண்டிய அன்பை அவன் நேரில்லாமையால் படத்தில் செய்ததும்தான்.

அதுபோல அர்ச்சாவிக்ரஹத்திற்கு ரூபம், குணம்முதலானவை யொன்றுமில்லை என்றாலும், ஸர்வேச்வரன் எல்லோருடைய கண்ணுக்கும் தெரியக்கூடியவனல்லாமையாலும், ஞானிகளாலுங்கூட உட்கண்ணாலேயே பார்க்கப்படுபவனாகையாலும், அவனிடத்தில் செய்யவேண்டிய பக்தி ப்ரபத்தி முதலானவற்றை, அவனால் வெளியிடப்பட்ட பாஞ்சராத்ரம் முதலான ஆகம க்ரந்தகளில் கூறியபடி ஒருவிக்ரஹத்தை ஏறியளருப்பண்ணி, அவனிடத்தில் செய்யவேண்டிய கைங்கர்யாதிகளை அதனிடத்தில் செய்தால் அவன் அவ்விக்ரஹத்தில் புதிதாக ஸான்னித்யம் செய்யாமற்போனாலும் 'தூணிலுமுளன் துரும்பிலுமுளன்' என்றபடியாவது விக்ரஹத்துக்கு அந்தர்யாமியாருப்பதால நாம் செய்யும் பக்தியாதிகளை தெரிந்து கொண்டு நமக்கு பலமளிப்பதில் யாதொரு குறையுமில்லை.

(2) பாரதத்தில் காணப்படும் ஏகலைவ்யன் வ்ருத்தாந்தத்தைப் பார்த்தாலும் நன்கு விளங்கும். ஏகலவ்யன் துரோணாசாரியரைப் போன்ற விக்ரஹத்தைச் செய்து அதை ச்ரத்தாபக்தியுடன் வணங்கி வில்வித்தையை அப்யஸித்தது த்ரோணாசார்யரும் கண்டு ஆச்சரியப்படும்படியான சாமர்த்யத்தை உடையவனாக இருந்தான். துரோணாசார்யர் வில்வித்தையை கற்றுக்கொடுக்க சம்மதிக்காமலிருந்தும் ஏகலவ்யன் மஹா சாமர்த்ய வானானது அவனுடைய ப்ரதிபத்தி விசேஷமே யொழிய அப்பிம்பத்தின் சக்தியன்று.

ஞானிகள் அர்ச்சாவிக்ரஹத்தை தொழுவதற்கு காரணம் பரம், வ்யூஹம் முதலான அவதாரங்களெல்லாவற்றிலும் ஸகல கல்யாண குணங்களுமிருந்தாலும், 'ப்ரபத்திக்கபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள் இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாசிப்பது இங்கேயிறே' என்றபடி ஸௌலப்யமும் ஸௌசில்யமும் ப்ரகாசிப்பது விபவாவதாரத்திலும் அர்ச்சாவதாரத்திலும்தான். இவ்விரண்டி

லும், விபவாவதாரம் நாமிருக்கும் தேசத்திலும் காலத்திலும் இல்லாமையாலும், அர்ச்சாவதாரம் அப்படியல்லாமல் எக்காலத்திலும் நாமிருக்கும்தேசத்திலும் (நம் க்ருஹங்களிலும்) நாம் செய்யும் சந்தன புஷ்பாதிகைங்கர்யங்களை பெற்றுக்கொண்டு நம்மை க்ருதார்த்தர்களாகச்செய்கிறபடியாலும், மிகவும சிறந்தது. இதை 'இதம் பூர்ணமத:பூர்ணம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே ஸர்வம்பூர்ணம் ஸஹோம்' என்று கடவல்லிஉபநிஷத்திலும், 'தஸ்ச்சயாமஹாதேஜா புங்க்தேவை பக்தவத்ஸலஸ்ஸ்ணம் ப்ஸனம்ததாயாத்ராய் குருதேவை ஜகத்பதி: ஸ்வதந்த்ர ஸ்ஸஜகன்னாதோப்யஸ்வதந்த்ரோ யதா ததா ஸர்வசக்திர்ஜகத்தாதாப்யசக்த இவசேஷ்டதே' என்றும் 'ஏவம் பஞ்சப்ரகாரோஹமாத்மானம் பததாமத: பூர்வஸ்மாதபி பூர்வஸ்மாஜ்ஜாயாயம்ச்சைவோத்தரோத்தர: ஸெளலப்யதோ ஜகத்ஸ்வாமி ஸுலபோஹ்யுத்தரோத்தர:' என்றும் விஷ்வக்ஸேன ஸம்ஹிதையிலும் 'ஆஸ்தாம்தே குணராசிவத் குணபரீவாஹாத்மனாம் ஜன்மனாம் ஸங்க்யா பௌமநிகேதனேஷ்வபி குடீகுஞ்ஜேஷு ரங்கேச்வர அர்ச்ய: ஸர்வஸஹிஷ்ணு: அர்சகபராதீனாகிலாத்ம ஸ்திதி: ப்ரீணீஷே ஹ்ருதயாளுபி: தவதத: சிலாஜ்ஜடீ பூயதே' என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தில் உலகத்தார் தர்மங்களை யநுஷ்டிக்கும்படி செய்வதற்காக வந்த சக்ரவர்த்தி திருமகன் தசரதசக்ரவர்த்தியால் நியமிக்கப்பட்ட பட்டாபிஷேகத்திற்கு பூர்வாங்கமாக அர்ச்சா மூர்த்தியாய் தங்களுக்கு குல தெய்வமான பெரிய பெருமாளை (ஸ்ரீரங்கநாதனை) ஆராதித்ததாக கூறப்பட்டிருக்கிறது (ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத் ப்ரக்ருஹ்ய சிரஸா பாத்ரம் ஹவிஷோ விதிவத்ததா வாக்யயத: ஸஹத்வைவதேஹ்யா பூத்வா நியதமானஸ: ஸ்ரீமத்யாயதனே விஷ்ணோ: சிஸ்யே நரவராத்மஜ:)

அர்ச்சாவதாரத்தில் மாத்திரம் அஸாதாரணமாகச்செய்ய கூடியதான சாயிக கைங்கர்யம்தான் திருவாராதனம்.

பகவதாராதன க்ரமத்தை உலகத்தாரறிந்து உஜ்ஜீவிக்கவேணுமென்கிற பரமக்ருபையுடன் எம்பெருமானார் பட்டர் முதலான நம்பூர்வாசார்யர்கள் அனேக க்ரந்தங்களை உபகரித்திருக்கிறார்கள். அவைகளனேகமாய் ஸம்ஸ்க்ருத பாஷையிலிருப்பதாலும் தேசகாலங்களை யநுஸரித்தும் மணவாள மாமுனிகள் தமிழ் பாஷையில்

எளிய நடையில் சுருக்கமாக ஒரு திருவாராதனக்ரமத்தை ப்ரஸாதித்தருளினர். இந்தக்ரந்தம் தாலகோசத்துக்குச்சரியான புராதனப்ரதியிலிருந்து அடியேன் ஒரு ஸ்வாமியினிடமிருந்து பெற்று வெளியிடத்துணிந்தேன். இதுவரையில் 'ஜீயர்படி திருவாராதனக்ரமம்' என்ற பெயருடன் அனேக ப்ரதிகள் வெளியாகியிருந்தும் அடியேன் இதை அச்சிடுவதற்கு காரணம் இக்கிரந்தத்தை பார்த்தபிறகு நன்றாக விளங்கும்.

ஜீயர்ஸாதித்த பகவதாராதன க்ரமத்தோடு 'ஜீயர்படி பகவதாராதனக்ரம விளக்கம்' என்கிற ப்ரபந்தம் ஒன்று அச்சிடப்பட்டிருக்கிறது. விசதவாக்சிகாமணியான மணவாளமாமுனிகள் இட்டருளிய கரந்தத்தை மந்தமதியான வடியேன் விளக்கப்புகுறுவது பரிஹாஸாஸ்பதமாயிருப்பினும், சில ஆஸ்திக சிகாமணிகளின் நியமனத்தைப்பின்சென்று இக்காலத்துக்கனுகுணமாக புஸ்தகம் அச்சிடுவதில் ஏதோ சில ஏற்பாடுகள் செய்யத்துணிந்தேன் ஆங்காங்குள்ள * முதலான குறிகளை கவனித்து அந்த பக்கங்களினிடையில் இருக்கும் அக்குறிகளின் ப்ரயோஜனத்தை எல்லாரும் அடையவேணுமாய் ப்ரார்த்திக்கிறேன்.

யாரிடத்திலேனும் புராதன தால கோசங்களில் இக்கிரந்தம் இருப்பின் அவைகளை உபகரித்தால் மறுபதிப்புக்கு மிக்க ஸஹகாரியாயிருக்கும். இக்க்ரந்தத்தை க்ரஹித்து அச்சிடும்போது உண்டாகக்கூடிய தோஷங்களேதேனு மிருப்பின் அவைகளை திருத்திப் பணிகொண்டு அடியேனை க்ருதார்த்தனுக்கவேணுமாய் ப்ரார்த்திக்கிறேன்.

தி. ப. ரா.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீ மணவாள மாமுனிகளருளிச்செய்த

# பகவதாராதன க்ரமம்.

வெடிவாரேயெழுந்திருந்து தந்ததாவன பூர்வகமாக ஸ்நாந நித்ய கர்மாநுஷ்டானங்களை பண்ணிக்கொண்டு திருத்துழாய்வனத்துக்குப்போய் (1) (துலஸ்யம்ருதஜன்மாஸி) யென்கிற சுலோகத்தை யநுஸந்தித்து சதுர்தளமாயிருக்கிற திருத்துழாய் கொழுந்துகளையும் புஷ்பங்களையும் யெழுந்தருளப்பண்ணிக் கொண்டுவந்து

---

## ஜீயர்படி பகவதாராதன க்ரம விளக்கம்.

நித்ய கர்மாநுஷ்டானங்களைச்செய்து கொண்டவனந்தரம் திருத்துழாய் வனத்துக்குச்சென்று (1) 'துலஸ்யம்ருதஜன்மாஸி ஸதாத்வம் கேசவப்ரியே, கேசவார்த்தம் லுநாமித்வாம் வரதா பவ சோபனே மோக்ஷைகஹேதோர்தரணி ப்ரஸூதே விஷ்ணோஸ்ஸமஸ்தஸ்ய ஜகத் ப்ரஸூதே: ஆராதநார்தம் புருஷோத்தமஸ்ய லுநாமி பத்ரம் துலஸிக்ஷமஸ்வ' என்று அநுஸந்தித்துக்கொண்டே சதுர்தளமாயிருக்கிற (நான்கு இதழோடுகூடிய) * திருத்துழாய் கொழுந்துகளையும் புஷ்பங்களையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு

---

* திருத்துழாயை வெள்ளி, செவ்வாய், ஞாயிறு, முதலான கிழமைகளிலும், மந்வந்தரங்கள், வருஷப்பிறப்பு, அஷ்டமி, ஸங்க்ராந்தி, த்வாதசி, பௌர்ணமி, முதலான திதிகளிலும், மத்யானத்திலும் எழுந்தருளப்பண்ணக்கூடாது. தகாதகாலத்தில் பறித்தால் ஸர்வேச்வரன் சிரஸ்ஸை கிள்ளினது போலாகும். சன்னிதி தோட்டத்திலிருந்து க்ருஹார்ச்சனைக்காக திருத்துழாய் கொண்டுவரக்கூடாது. தானாக விழுந்ததாயும், பிறருக்காக உத்தேசித்ததாயும், மலராததாயும், உள்ள துளஸீ புஷ்பாதிகளை உபயோகிக்கக்கூடாது, கையிலாவது, வஸ்த்ரத்திலாவது, எருக்கு அல்லது ஆமணக்கு அல்லது ஆலிலையிலாவது, கொண்டுவரக்கூடாது. புஷ்பாதிகளையாவது அமுது செய்யப்பண்ணப்போகிற வஸ்துக்களையாவது வாசனை பார்க்கக் கூடாது.

(ஜீ) பரிசுத்த ஸ்தலத்திலே வைத்து நன்றாக காலையும் கையையும் கழுவி ஆசமனம் பண்ணி ஸன்னிதிமுன்பே சென்று குருபரம்பரா நுஸந்தான பூர்வகமாக தண்டன் சமர்ப்பித்து உள்ளே சென்று (2) 'கௌஸல்யாஸுப்ராஜ ராம' என்கிற ச்லோகத்தையும் 'நாயகனாய்' என்கிற பாசுரத்தையும் அனுஸந்தித்து அஸ்த்ரமந்த்ரத்தாலே மூன்று தரம் கையைத்தட்டி கோயிலாழ்வார் திருக்காப்பு நீக்கி, 'திருப்பல்லாண்டு' 'அடியோமோடும்' 'மாரிமலைமுழைஞ்சில்' 'அன்றிவ்வுலகமளந்தாய்' 'சிற்றம் சிறுகாலே' என்கிற பாசுரங்களையும்

---

(விளக்கம்)

வந்து தீர்த்தத்தால்சோதித்துசுத்தமானஸ்தலத்திலே வைத்துவிட்டு கைகால்களை சுத்திசெய்துகொண்டு ஆசமனம்பண்ணி ஸன்னிதி முன்பே (அதாவது பெருமாளுக்காக ப்ரத்யேகமாக யேற்படுத்தி யிருக்கும் இடத்திற்கு) சென்று * குருபரம்பரையை அநுஸந்தித் துக்கொண்டு தண்டம் ஸமர்ப்பித்துபெருமாள் எழுந்தருளியிருக்கும் அறைக்குள் சென்று (2) 'கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்ததே, உத்திஷ்ட நரசார்த்தூல கர்தவ்யம் தைவமாந்நிகம்' என்கிற ச்லோகத்தையும் 'நாயகனாய்' என்கிற பாசுரத்தையும் அநுஸந்தித்து, 'ஓம் ஸஹஸ்ரோல்காய ஸ்வாஹா வீர்யாய அஸ்திராயபட்' என்கிற அஸ்த்ரமந்திரத்தை சொல்லிக்கொண்டு கையைத்தட்டி கோயிலாழ்வார் திருக்காப்பு நீக்கி, 'பல்லாண்டு,' 'அடியோமோடும்' 'மாரிமலை முழைஞ்சில்' 'அன்றிவ்வுலகமளந்தாய்'

---

திருத்துழாய் முதலானவற்றை க்ரஹிப்பதற்கு தேச, கால, ப்ரகார நியமாதிகளை வைத்துவிட்டபடியால் சேர்த்தாப்போல் நான்கு, ஐந்து தினங்கள் நிஷித்ததினமாகில் என்ன செய்வது, திருத்துழாய் அகப்படாவிட்டால் என்ன செய்வது உலர்ந்ததை உபயோகப்படுத்தலாமா என்றால்--- துளஸியை சரியான காலத்தில் தகுந்தபடிபறித்துவிட்டால் ஒரு வருஷம் வரையிலும் வில்வம் ஆறு மாதம் வரையிலும் தாமரை புஷ்பம் ஏழு தினங்கள் வரையிலும் தாழம்பூ மூன்று தினங்கள் வரையிலும் உபயோகப்படும் துளஸி அகப்படாவிட்டால்உபயோகப்படுத்தினதையே சோதித்து உபயோகப்படுத் லாம். மற்றவைகள் ஒருதரம் உபயோகப்படுத்தினால் திரும்பவும் உபயோகப்படாது.

* அஸ்மத் குருப்யோநம:, அஸ்மத் பரம குருப்யோநம:, அஸ்மத்ஸர்வ குருப்யோ நம:, ஸ்ரீமதே ராமாநுஜாய நம:, ஸ்ரீபராங்குசதாஸாய நம:, ஸ்ரீமத்யாமுனமுனயே நம:, ஸ்ரீராமமிச்ராய நம:, ஸ்ரீ புண்டரீகாக்ஷாய நம: ஸ்ரீமன்நாதமுனயே நம:, ஸ்ரீமதே சடகோபாய நம:, ஸ்ரீமதேவிஷ்வக்சேனாய நம:, ஸ்ரீயை நம:, ஸ்ரீதராய நம:.

(ஜீ) (3) 'நமோ நமோ வாங்மனஸாதி பூமயே' (4) 'நதர்மநிஷ்டோஸ்மி' என்கிற சுலோகங்களையும நுஸந்தித்து மீளவும் ஸந்நிதிவெளியே சென்று தீர்த்த எம்பெருமான்களை வெளியிலே எழுந்தருளப் பண்ணி திருப்படிக்கை உதரிப்படுத்து மீளவும் தீர்த்தஎம்பெருமான்களை எழுந்தருப்பண்ணி எம்பெருமானுக்கு வலதுபார்ச்வத்தில் அஞ்சலிஹஸ்தனாய் (5) 'கூர்மாதீன் திவ்யலோகம்' என்கிற சுலோகத்தை

---

(வி) 'சிற்றம் சிறுகாலே' என்கிற பாசுரங்களையும் (3) 'நமோ நமோ வாங்மனஸாதி பூமயே நமோ நமோ வாங்மனஸைக பூமயே நமோ நமோனந்த மஹா விபூதயே, நமோ நமோனந்ததயைக ஸிந்தவே' (4) 'நதர்ம நிஷ்டோஸ்மி நசாத்மவேதீ நபக்திமாம் த்வச் சரணாரவிந்தே அகிஞ்சனோனன்யகதிச்சரண்ய, தவத்பாத மூலம் சரணம் ப்ரபத்யே'' என்கிற ச்லோகங்களையும் அநுஸந்தித்து விட்டு, எம்பெருமான்களை கோயிலாழ்வார் நின்றும் பரிசுத்த ஸ்தலத்தில் பரிசுத்தமான பாத்திர வேதிகை (தட்டு) முதலானவைகளில் எழுந்தருளப் பண்ணி, கோயிலாழ்வாரை சோதித்து (உள்ளே உள்ள பழைய புஷ்பாதிகளை எடுத்துவிட்டு) எம்பெருமான்களை முன்போல கோயிலாழ்வாரில் எழுந்தருளப்பண்ணி விட்டு எம்பெருமானுக்கு * வலது பார்ச்வத்தில் நின்றுகொண்டு அஞ்சலி ஹஸ்தனாய் கையை கூப்பிக்கொண்டு (5) "கூர்மாதீன் திவ்யலோகாந் ததநுமணிமயம் மண்டபம் தத்ரசேஷம், தஸ்மிந் தர்மாதிபீடம் ததுபரிகமலம் சாமரக்ராஹிணீச்ச, விஷ்ணுந் தேவீர் விபூஷாயுதகண முரகம் பாதுகே வைநதேயம், சேநேசம் த்வாரபாலாந் குமுதமுககணாந் விஷ்ணுபக்தாந் ப்ரபத்யே,'' 'ஸவ்யம் பாதம் ப்ரஸார்ய ச்ரிததுரிதஹரம் தக்ஷிணம் குஞ்சயித்வா, ஜாநுந்யாதாய ஸவ்யேதர மிதரபுஜம் நாகபோகே நிதாய, பச்சாத் பாஹுத்வயேந ப்ரதிபடசமநே தாரயம் சங்கசக்ரே, தேவிபூஷாதிஜுஷ்டோ விதாது ஜகதாம் சர்மவைகுண்டநாத:'' என்கிற ச்லோகங்களை

---

* பெருமாளுக்கு வலது பக்கமானாலும், இடது பக்கமானாலும், இருக்கலாம். பக்கத்தைப்பற்றி அவசியமில்லை. திருவாராதனம் செய்யும்போது வடக்கு அல்லது கிழக்கு முகமாகத்தான் இருக்கவேண்டு மென்பதுதான் முக்கியம் என்று சிலருடைய அபிப்பிராயம். பெருமாள் எந்த முகமாக எழுந்தருளியிருந்தாலும் "தேவ ப்ராசி" என்று அந்த திக்கையே கிழக்காக நினைத்து அவருக்கு வலது புறத்தில்தான் இருக்கவேண்டும் என்று சில பெரியோர்களின் திருவுள்ளம்.

யநுஸந்தித்து ‘ஸ்ரீமதே நாராயணாயநம: ஸ்ரீம் ஸ்ரீயைநம: பூம் பூம்யைநம: நீம் நீளாயநம: ஸமஸ்த பரிவாராய ஸர்வ மங்கள விக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாய நம: கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான நூற்றெட்டு திவ்ய தேசத்தெம்பெருமான்களும் நித்ய ஸூரிகளோடே ஸாந்நித்யம் செய்தருளவேணும்’ என்று விண்ணப்பம் செய்து திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை சமர்ப்பித்து தனக்கிடது பார்ச்வத்திலே திருமஞ்சனத்தாழியை வைத்து அதில் திருமஞ்சனத்தை பூரித்து ஏலக்காப்பும்சாத்துப்படியையும் திருத்துழாய்கொழுந்தையும் பரிமாறி ஒருதிருத்துழாய்கொழுந்தை

---

அநுஸந்தித்து “ஸ்ரீமதே நாராயணாயநம:, ஸ்ரீம் ஸ்ரீயைநம:, பூம் பூம்யைநம:, நீம் நீளாயநம:, ஸமஸ்தபரிவாராய ஸர்வமங்கள விக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாயநம:, * கோயில், திருமலை, பெருமாள் கோவில் முதலான நூற்றெட்டு திவ்யதேசத்தெம்பெருமாள்களும் நித்திய ஸூரிகளோடே சாந்நித்யம் செய்தருளவேணும்” என்று விண்ணப்பம் செய்து திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை சமர்ப்பித்து தனக்கு இடது பக்கத்தில் திருமஞ்சனத்தாழி (அதாவது ஓர் பெரிய சொம்பு அல்லது திருக்காவேரி)யை வைத்து அதில் திருமஞ்சனத்தை (தீர்த்தத்தை) பூரித்து ஏலக்காப்பும் சாத்துப்படியும் திருத்துழாய் கொழுந்தையும் பரிமாறி, ஆள்காட்டி

---

* 108 திவ்யதேசங்களுக்குள் கோயில், திருமலை, பெருமாள்கோவில்களை ப்ரதானமாக எடுத்துக்கொள்வானேன், ஒவ்வொரு திவ்ய தேசத்துக்கும் ஒவ்வொருவிதமான ஏற்றம் இல்லையா? என்றால் “பூதம் மஸ்தசமஹிணீஹ்ருத மஹத்ஸூரீச பட்டேச்வரம் வக்த்ரம் பக்தி கனம் களம்குலசிரோ பூஷம் முநிம்காயகம் தோர்யுக்மம் ஹரிதாஸபத்ரஜ உரோநாபிம் கவித்வம்ஸிகம் ஸ்ரீபாதம் மதுரம்கவிம் யதிபதிம் சாஹுச்சடா ரேபுதா;” என்றபடி ஆழ்வார்கள் பதின்மர்கள் அவயவி என்று சொல்லும்படி தலைவரான நம்மாழ்வார், பகவத்விஷயத்திலுண்டான தம் அவாவினால் சொன்ன ப்ரபந்தங்களில் தலைமையான திருவிருத்தத்தில் “நானிலம் வாய்க்கொண்டு...கால்கிலர்தோய்ந்து விண்ணோர் தொழும் கண்ணன் வெஃகாவுதம் பூம்தேனிளஞ் சோலை யப்பாலது” என்று காஞ்சீபுரத்தையும், “தண்ணந்துழாய்.........புன்னந்துழாமே பொருநீர்த் திருவரங்காவருளாய்” என்று ஸ்ரீரங்கத்தையும், “மலையோ முழுமுத்தும் போந்தில...........பெருமான மலையே திருவேங்கடமென்று கற்கின்ற வாசகமே” என்றும் திருமலையையும் மாத்திரம்பாடியிருக்கிறபடியால் அவருடைய அவாவின் மிகுதிக்கு விஷயமான இம்மூன்று திவ்ய தேசங்களையும் ப்ரதானமாக எடுக்கப்பட்டுள்ளன என்று பெரியோர்கள் பணிக்கும்படி.

வலது கையிலே யிருக்கிக்கொண்டு திருமஞ்சனத்தாழியை ஸ்பர்சித்துக்கொண்டு த்வயத்தாலே எழுருவாதல் அஞ்சுருவாதல் அபிமந்த்ரித்து எம்பெருமானுக்கு திருமுன்பே பாத்ரவேதிகையிலே அர்க்ய, பாத்ய, ஆசமன, ஸ்நாநீயார்த்தமாகவும், மத்யே சுத்த ஜலார்த்தமாகவும் பஞ்சபாத்ரங்களையும் ஸ்தாபித்து திருமஞ்சனத்தாழியில் நின்று உத்தரணியாலே திருமஞ்சனத்தையெடுத்து பஞ்ச பாத்திரங்களிலேயும் துளிதுளித்து உத்தரவாக்கியத்தாலே பாத்திரங்களை சோதித்து திருமஞ்சனத்தை பூரித்து திருத்துழாய்

---

விரலுக்கும் நடுவிரலுக்கும் மத்தியில் ஒருதிருத்துழாய் கொழுந்தை இருக்கிக்கொண்டு திருமஞ்சனத்தாழியை ஸ்பர்சித்துக்கொண்டு * த்வயத்தாலே அபிமந்திரித்து (5 அல்லது 7 தரம் த்வயத்தை அநுஸந்தித்துக்கொண்டு), எம்பெருமானுக்கு திருமுன்பே பாத்ர வேதிகையிலே, பஞ்சபாத்திரங்களை ஸ்தாபித்து [ஆக்னேயத்தில் (தென்கிழக்கில்) அர்க்ய வட்டில், நைருதியில் (தென்மேற்கில) பாத்திய வட்டில், வாயவ்யத்தில் (வடமேற்கில்) ஆசமன வட்டில், ஈசான்யத்தில் (வடகிழக்கில்) ஸ்நான வட்டில், இந்நான்கு வட்டில்களுக்கும் மத்தியில் சுத்தோதக வட்டில். இந்த ஏற்பாடு பெருமாள் கிழக்கு முகமாக எழுந்தருளியிருந்தால். இல்லாவிடில் அந்தந்த திக்குக்குத் தகுந்தாற்போல் அதாவது, வடக்கு முகமாக எழுந்தருளியிருந்தால் ஈசான்யம் தொடங்கியும், வட்டில்களை ஸ்தாபிக்க வேண்டும். இதே மாதிரி மற்றவைகளுக்கும் ஊஹித்துக் கொள்ளவும்] திருமஞ்சனத்தாழியில் நின்று உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து பஞ்சபாத்திரங்களிலேயும் துளிதுளித்து உத்தர வாக்யத்தாலே பாத்ரங்களை முன்னும் பின்னுமாக சோதித்து திருமஞ்சனத்தை பூரித்து திருத்துழாய் கொழுந்தையும் சாற்றுப்படியையும் பரிமாறி ஒரு திருத்துழாய் கொழுந்தை ஆள் காட்டி விரலுக்கும் நடுவிரலுக்கும் மத்தியில் இருக்கிக்கொண்டு பஞ்சபாத்ரங்

---

* த்வயத்தில் பூர்வ வாக்யமென்றும், உத்தரவாக்யமென்றும் இரண்டு பூர்வவாக்யம்—ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே. உத்தர வாக்யம்—ஸ்ரீமதே நாராயணாய நம: “உத்தர வாக்யத்தை அநுஸந்தி” என்பதற்குபதில “த்வயத்தை அநுஸந்தி” என்று சொல்லி யிருப்பதால், ‘த்வயத்தை அநுஸந்தி’ என்கிற இடத்திலெல்லாம் உத்தரவாக்யத்தை அநுஸந்திக்கவும்.

(ஜீ) கொழுந்தையும் சாத்துப்படியையும் பரிமாறி ஒருதிருத்துழாய் கொழுந்தை விரலிலே இருக்கிக்கொண்டு பஞ்சபாத்திரங்களையும் ஸ்பர்சித்து உத்தர வாக்யத்தாலே அபிமந்த்ரித்து அர்க்ய பாத்திர மொழிந்த பாத்யாதி நான்கு பாத்ரங்கள் நின்றும் உத்தரணி யாலே திருமஞ்சனத்தை எடுத்து அர்க்ய பாத்திரத்திலே சேர்த்து அதில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து சாத்துப்படியையும் திருத்துழாய் கொழுந்தையும் பரிமாறி உத்தரணியை யெடுத்து கையிலே வைத்து வலது கையாலே மூடிக் கொண்டு "ஸ்ரீமதே நாராயணாயநம: ஸ்ரீம் ஸ்ரீயைநம: பூம் பூம்யை நம: நீம்நீளாயநம: ஸமஸ்தபரிவாராய ஸர்வமங்களவிக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாயநம: விரஜா தீர்த்த மாகவாதல் திருக்காவேரி தீர்த்த

---

(வி) களையும் ஸ்பர்சித்து *உத்தர வாக்கியத்தாலே அபிமந்த்ரித்து, அர்க்ய பாத்திரம் தவிர, மற்ற நான்கு பாத்திரங்களில் ஒவ்வொன் றிலிருந்தும் ஒவ்வொரு உத்தரணி திருமஞ்சனத்தை யெடுத்து அர்க்ய பாத்திரத்தில் சேர்த்து அனந்தரம் அதில் நின்றும் உத்த ரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து சாத்துப்படியும் திருத்துழாய் கொழுந்தும் பரிமாறி உத்தரணியை எடுத்து கையிலே வைத்து வலது கையால் மூடிக்கொண்டு நாஸிகையளவாக (தன் மூக்கு அவ் வளவுயரம்) தூக்கிக்கொண்டு "ஸ்ரீமதே நாராயணாய நமஃ, ஸ்ரீம் ஸ்ரீயை நமஃ, பூம் பூம்யைநமஃ, நீம் நீளாயநமஃ, ஸமஸ்த பரிவாராய ஸர்வமங்கள விக்ரஹாய ஸ்ரீமதேநாராயணாயநமஃ 0 விராஜாதீர்த்த

---

* சிலர் சோஷதாஹன ப்லாவனங்கள் செய்வதுண்டு சோஷண தாஹன க்ரமம்—"ஓம் யம் வாயவேநமஃ சோஷயாமி, ஓம் ரம் அக்னயே நமஃ தாஹயாமி, ஓம் வம் ஸோமாயநமஃ ப்லாவயாமி" என்று வட்டில்களை கையால் மூடிக்கொண்டே சொல்லவும் அநந்தரம் சுரபிமுத்திரை (அதாவது இரண்டு ஹஸ்தங்களையும்கூப்பி வலதுகையின் நடுவிரலையும் இடதுகையில் ஆள்காட்டி விரலையும் சேர்த்து, வலது கையின் ஆள்காட்டி விரலையும் இடது கையில் நடு விரலையும் சேர்த்து, சுண்டு விரலையும் பவித்திரவிரலையும், சேர்த்து, வலது பவித்திர விரலையும் இடது சுண்டு விரலையும் சேர்க்க, இப்படி இரண்டு விரல் கள் சேர்ந்து ஒருமுலையாய் பசுவின் நான்கு முலைபோல காட்டும் முத்திரை) காட்டவும்.

0 'அனந்த ஸரஸீதோயம் கல்யாணி ஸரஸீபயஃ இதந்து விரஜாதோயம் காவேரி ஸர்வதோமுகீ' என்கிற ச்லோகத்தை இங்கு சிலர் அநுசந்தானம்

(ஜீ) மாகவாதல் திருவுள்ளம் பற்றியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து உத்தரணி தீர்த்தத்தை திருமஞ்சனத் தாழியிலும் பஞ்சபாத்திரங்களிலேயும் துளித்துளி சேர்த்து சேஷித்த தீர்த்தத்திலே திருத்துழாய் கொழுந்தை தோய்த்து தன்னையும் யாக பூமியையும் உத்தரவாக்யத்தாலே ப்ரோக்ஷித்து சேஷித்த ஜலத்தை திருப்படிகத்தில் சேர்த்து ஆசார்யன் திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப்பித்து திருவடி விளக்கி மீளவும் பஞ்ச பாத்ரங்களையும் சோதித்து பூர்வம்போலே திருமஞ்சனத்தை பூரித்து அபிமந்த்ரித்து சோஷித்து உடையவர் திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தையும் ஸமர்ப்பித்து "ஸ்ரீமதே ராமாநுஜாய நம:, திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் மந்த்ராஸனத்துக்கு எழுந்தருளவேணும் ஆசார்யன் திருக்கைகளாலே திருவாராதனம்

---

(வி) மாகவாதல். திருக்காவேரி தீர்த்தமாகவாதல் திருவுள்ளம்பற்றியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து உத்தரணி தீர்த்தத்தை திருமஞ்சனத்தாழியிலும் பஞ்சபாத்திரங்களிலேயும் துளிதுளித்து சேஷித்த தீர்த்தத்தாலே திருத்துழாய் கொழுந்தை தோய்த்து தன்னையும் யாக பூமியையும் (திருவாராதனம் செய்யுமிடம்) உத்தரவாக்யத்தாலே ப்ரோக்ஷித்து சேஷித்த ஜலத்தை 0 திருப்படிகத்திலே சேர்த்துவிடவும்.

முதலில் "அஸ்மத் குருப்யோநம:" என்று ஆசார்யன் திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப்பித்து திருவாராதனம் செய்யவும். (திருவாராதன விதி என்னெனில் உடையவருக்கு செய்யும்படி......பக்கத்தில் சொன்னபடி தான் இங்கும்.)

அனந்தரம் * பஞ்ச பாத்ரங்களையும் சோதித்து முன்போலவே திருமஞ்சனத்தை பூரித்து அபிமந்த்ரித்து, "ஸ்ரீமத்வரவரமுனயே நம:" என்று மணவாள மாமுனிகளுக்கு திருவாராதனம் செய்யவும்.

---

0 திருப்படிகத்தை பெருமாளுக்கு இடது பார்ச்வத்தில் அதாவது பஞ்ச பாத்ரங்களுக்கு பக்கத்தில் தனக்கு நேர் எதிரில் ஸ்தாபிக்கவும்.

* ஆசார்யாதிகளுக்கு வேறு பாத்ரங்களை உபயோகப்படுத்தவேண்டுமென்று சிலர் அபிப்ராயம். பெருமாள் பாத்திரங்களையே அடிக்கடி சோதித்துக்கொள்ளும்படி மணவாள மாமுனிகள் க்ரந்தத்தில் காணப்படுகிறது. சௌகர்யப்படி செய்யவும். வேறு பாத்திரமாகில் பெருமாள் பாத்திரங்களுக்கு எதிரில் ஸ்தாபிக்கவும்.

(ஜீ) கண்டருளவேணும்' என்று விண்ணப்பம்செய்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஸ்ரீமதே ராமாநுஜாய நமஃ அர்க்யம் கண்டருளவேணும்" என்று வலது திருக்கையிலே ஸமர்ப்பித்து, கண்டருளினதாக பாவித்து மூன்று உத்தரணி தீர்த்தத்தை திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்ரத்



(வி) உடையவருக்கு திருவாராதனம்—ஸபர்யாஸனம் (மந்த்ராஸனம்.)

மீண்டும் பஞ்சபாத்திரங்களை சோதித்து பூர்வம்போல திருமஞ்சனத்தை பூரித்து அபிமந்த்ரித்து சோஷித்து உடையவர் திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமாப்பித்து "ஸ்ரீமதே ராமாநுஜாயநமஃ திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் மந்த்ராஸனத்திற் கெழுந்தருளவேணும் ஆசார்யன் திருக்கைகளால் திருவாராதனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதே ராமாநுஜாயநம: அர்க்யம் கண்டருளவேணும்" என்று வலது திருக்கையிலே ஸமர்ப்பித்து கண்டருளினதாக பாவித்து மூன்று உத்தரணி தீர்த்தத்தை திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே (மத்தியில் வைத்திருக்கும் சுதத்தோதக பாத்திரத்தில்) சோதித்து பாத்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதே ராமாநுஜாயநமஃ பாத்யம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து * மூன்று தரம் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து 0 அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணி

* அர்க்யம் முதலானவைகளில் பாத்யம் தவிர மற்றவையெல்லாம் மூன்று தரம் என்றும், பாத்யம் மாத்திரம் இரண்டு தரம் என்றும் சிலர் அபிப்ராயம்.

0 அர்க்ய, பாத்ய, ஆசமனீயாதிகளில் மணவாளமாமுனிகள் சாதித்த ஏற்பாட்டை சற்று கவனிக்கவேண்டும். அவைகளின் க்ரமம் ஆசனம் தோறும் மாறும். அவைகளை கீழ்வருமாறு கண்டுகொள்வது:—

(1) ஸபர்யாஸனம் (மந்த்ராசனம்)—அர்க்ய, பாத்ய, அர்க்ய, ஆசமனீயம்.
(2) ஸ்நானாசனம்—பாத்ய, அர்க்ய, ஆசமனீயம்.
(3) அலங்காராசனம்—அர்க்ய, பாத்ய, அர்க்ய, ஆசமனீயம்.
(4) போஜ்யாசனம்—பாத்ய, அர்க்ய, ஆசமனீயம்.
(5) மந்த்ராசனம்—அர்க்ய, பாத்ய, அர்க்ய, ஆசமனீயம்.
(6) பர்யங்காசனம்—பாத்ய, அர்க்ய, ஆசமனீயம்.

(ஜீ) தில் நின்றும் உத்தாணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "பாத்யம் கண்டருளவேணும்," என்று விண்ணப்பம் செய் மூன்றுதரம் திருப்படிகத்திலே சேர்த்து உத்தாணியை [illegible]த ஜலத்திலே சோதித்து, அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தாணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கி யருள வேணும்" என்று மூன்று தரம் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தாணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தாணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து மூன்று தரம் திருப்படிகத்திலே சேர்த்து உத்தாணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றுடை ஒருதலையாலே திருக்கைகளுக்கும் திருப்

---

(வி) யாலே திருமஞ்சனத்தையெடுத்து, "ஸ்ரீமதே ராமானுஜாயநம: திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து மூன்று தரம் திருப்படிகத்திலே சேர்த்து உத்தாணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்திரத்தில் நின்றும் உத்தாணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதே ராமானுஜாயநம: ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து மூன்று தரம் திருப்படிகத்திலே சேர்த்து உத்தாணியை சுத்த ஜலத்திலே சோதித்து விட்டு* அனந்தரம், திருவொற்றுடைக் கென்று ப்ரத்யேகமாக வைத்திருக்கும் ஒரு வஸ்த்ரத்தை எடுத்து "திருவொற்றுடை ஒரு தலைப்பாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருவொற்றுடை சாற்றியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருள வேணும்" என்று விண்ணப்பம் செய்து ஒரு தலைப்பினால் திருக்கை, திருப்பவளங்களுக்கும், இரண்டாவது தலைப்பினால் திருவடிகளுக்கும் திருவொற்றுடை சமர்ப்பிக்கவும்.

### உடையவருக்கு ஸ்நானாஸனம்.

"ஸ்ரீமதே ராமானுஜாயநம: திருவடிகள் நிலைசாத்தியருள வேணும், ஸ்நானாஸனத்திற்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து பாத்ய, அர்க்ய, ஆசமனீயங்கள் சமர்ப்பித்து

---

* உபயோகப்படுத்தாத சமயத்தில் உத்தாணியை எப்பொழுதும் சுத்தோதக பாத்திரத்தில்தான் வைத்திருக்கவேண்டும்.

ஜீ. பவளத்திற்கும் திருவொற்றுடை சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து "திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே சமர்ப்பித்து "ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருவடிகள் நிலை சாத்தியருளவேணும் ஸ்நானாஸனத்துக்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தாணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதே திருவடிகள் விளக்கியருள வேணும்" என்று விண்ணப்பம் செய்து மூன்றுதரம் திருப்படிகத்திலே சேர்த்து உத்தாணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து மூன்றுதரம் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருள வேணும்" என்று விண்ணப்பம் செய்து மூன்றுதரம் திருப்படிகத்தில் சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றுடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்துக்கும் திருவொற்றுடை சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து திருத்துழாய் கொழுந்தாலே திருமுத்து விளக்கி திருப்படிகத்திலே புகட்டு அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து கையைக்கழுவி மத்தொரு

(வி) 0 திருவொற்றுடை ஒருதலைப்பாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் தலைமாறி திருவடிகளுக்கும் திருவொற்றுடை சாத்தி, திருத்துழாய் கொழுந்தாலே திருமுத்து விளக்கி (பல் தேய்த்து) அந்த திருத்துழாய் கொழுந்தை படிகத்திலே புகட்டு

0 அந்தந்த இடங்களுக்குத்தக்கபடி திருவொற்றுடை திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், திருமுகமண்டலத்திற்கும், திருவடிகளுக்கும் சமர்ப்பிக்கவேண்டும், அதாவது—சில சந்தர்ப்பங்களில் திருப்பவளத்திற்கும், திருக்கைகளுக்கும் திருவடிகளுக்குமாவது அல்லது திருக்கைகளுக்கும் திருவடிகளுக்குமாவது, சமர்ப்பிக்கவேண்டிவரும். அந்தந்த சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி செய்யவும்.

(ஜீ) கொழுந்தாலே திருநாக்கு வழித்து திருப்படிகத்திலே புகட்டு கையை கழுவி அர்க்ய பாத்ரத்தில் நின்றும் திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதே திருப்பவளம் மாற்றியருளவேணும், ஸ்ரீக் கைகள் விளக்கியருளவேணும், திருமுகமண்டலம் விளக்கியரு வேணும், திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருவடிகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்தில் சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத்தில நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, "திருவொற்றாடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருமுகமண்டலத்திற்கும் திருப்பவளத்திற்கும் சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றாடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே சமர்ப்பித்து, "ஸ்ரீமதே ராமாநுஜாயநம: திருவடிகள் நிலைசாத்தியருள வேணும், திருமஞ்சனவேதிகையில் எழுந்தருளவேணும், பொலியல்

---

(வி) மற்றொரு திருத்துழாய்க் கொழுந்தாலே திருநாக்கு வழித்து திருப்படிகத்திலே சேர்த்து கையை சோதித்துக்கொண்டு அர்க்ய பாத்ரத்தில் நின்றும் திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதே ராமாநுஜாயநம: திருக்கைகள் விளக்கியருளவேணும், திருப்பவளம் மாற்றி யருளவேணும் (வாயைக் கொப்பளித்தல்) திருக்கைகள் விளக்கியருளவேணும், திருமுகமண்டலம் விளக்கியருளவேணும் திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் (மும்மூன்றுதரம்) திருப்படிகத்திலே சேர்தது உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய, அர்க்ய, ஆசமனீயங்களும், திருவொற்றாடை ஒரு தலைப்பாலே திருக்கைகளுக்கும் திருமுகமண்டலத்திற்கும், திருப்பவளத்திற்கும், தலைமாறி திருவடிகளுக்கும் சமர்ப்பிக்கவும். "ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

(ஜீ) சாத்தியருளவேணும், எண்ணெக்காப்பு சாத்தியருளவேணும் திருமுடிக்காப்புக்காக மெல்லிக்காப்பு சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து ஸ்நானீய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருமஞ்சனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து தியானித்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமனீய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஆசமனீயம் கண்டருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றுடை ஒரு தலையாலே திருமுடி திருமேனி யெங்கு மொக்க சாத்தியருளவேணும், தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே சமர்ப்பித்து "ஸ்ரீமதே திருவடிகள் நிலைசாத்தியருளவேணும், அலங்காராஸனத்துக்கு

---

(வி) திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் திருமஞ்சன வேதிகையில் எழுந்தருளவேணும்" என்று ப்ரார்த்தித்து திருமஞ்சன வேதிகையில் 'எழுந்தருளப்பண்ணி' "ஒலியல் சாத்தியருளவேணும், எண்ணெக்காப்பு சாத்தியருளவேணும், திருமுடிக்காப்புக்காக மெல்லிக்காப்பு சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து ஸ்நானீய பாத்திரத்தில் நின்றும் திருமஞ்சனத்தை எடுத்து "திருமஞ்சனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, த்யானித்து திருமஞ்சனம் கண்டருளப்பண்ணி, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்யமும், ஆசமனீயமும் சமர்ப்பித்து, "திருவொற்றுடை ஒரு தலைப்பாலே திருக்கைகளுக்கும் திருமுடி திருமேனி யெங்கும் ஒக்க திருவொற்றுடை சாத்தியருளவேணும், மறு தலைப்பாலே திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, திருவொற்றுடை சாற்றி.

(ஜீ) எழுந்தருளவேணும், திருப்பரியட்டம் சாத்தியருளவேணும் திருவுத்தரீயம் சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தாணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஸ்ரீமதே அர்க்யம் கண்டருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "திருவடிகள் விளக்கியருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, மீளவும் அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தாணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "திருக்கைகள் விளக்கி அருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்தில் சோதித்து, ஆசமன பாத்ரத்தில் நின்று உத்தாணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றுடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து

---

(vi) உடையவருக்கு அலங்காராஸனம்.

திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே* சமர்ப்பித்து "ஸ்ரீமதே ராமானுஜாய நம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் அலங்காராஸனத்துக்கு எழுந்தருளவேணும் திருப்பரிப்ட்டம் சாத்தியருளவேணும் உத்தரீயம் சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, அர்க்ய. பாத்ய, அர்க்ய, ஆசமனீயங்களும், திருவொற்றுடை ஒரு தலைப்பாலே திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், தலைமாறி திருவடிகளுக்கும் சாத்தி, திருத்துழாய் கொழுந்தை எடுத்துக்கொண்டு "ஸ்ரீமதே ராமானுஜாய நம:, திருமண்காப்பு சாத்தியருளவேணும், ஸ்ரீசூர்ணகாப்பு சாத்தியருளவேணும் திருயஜ்ஞோபவீதம் சாத்தியருளவேணும், திருப்படித்

---

* ஆழ்வாராசார்யர்களுக்கு திருத்துழாயை திருவடியில் சேர்க்கக் கூடாது. திருமுடியிலும், அஞ்சலியிலும் மாத்திரம் சேர்க்கவும் புஷ்பத்தை பதிலாக உபயோகிக்கலாம் என்று சிலர் அபிப்ராயம்.

(ஜீ) "ஸ்ரீமதே ராமாநுஜாய நமஃ திருமண்காப்பு சாத்தியருளவேணும் ஸ்ரீசூர்ணகாப்பு சாத்தியருளவேணும், திருயஞ்ஞோபவீதம் சாத்தியருளவேணும், திருப்படித்தாமம் சாத்தியருளவேணும், சாத்துப்படி சாத்தியருளவேணும் திருவாபரணம் சாத்தியருள்வேணும், ஆசார்யன் திருக்கைகளால் சர்வோபசாரங்களையும் கண்டருளவேணும்" என்று திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை சமர்ப்பித்து,

மீளவும் பஞ்சபாத்திரங்களையும் சோதித்து பூர்வம் போலே திருமஞ்சனத்தை பூரித்து சோஷித்து "பராங்குச பரகாலாதிப்யோ நமஃ" என்று திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப்பித்து உடையவர்க்கு சமர்ப்பித்தது போலவே திருவாராதனம் பண்ணுகிறது.

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து திருமஞ்சனத்தை பூரித்து அபிமந்திரித்து சோஷித்து "ஸ்ரீமதே விஷ்வக்ஸேனாய நமஃ, அனந்தாய நாகராஜாய நமஃ, வைனதேயாய பக்ஷிராஜாய

---

(வி) தாமம் சாத்தியருளவேணும், திருவாபரணம் சாத்தியருளவேணும் திருமாலை சாத்தியருளவேணும், திருக்கண்ணாடி கண்டருளவேணும், ஆசார்யன் திருக்கைகளால் ஸர்வோபசாரங்களையும் கண்டருளவேணும்" என்று திருவடிகளிலே சமர்ப்பிக்கவும்.

## ஆழ்வாராதிகளுக்கு திருவாராதனம்.

மீளவும் பஞ்சபாத்திரங்களையும் சோதித்து பூர்வம் போலே திருமஞ்சனத்தை பூரித்து சோஷித்து "ஸ்ரீமதே பராங்குசபரகாலாதிப்யோ நமஃ" என்று திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப்பித்து உடையவருக்கு ஸமர்ப்பித்தது போலவே ஸபர்யாஸனம் (மந்த்ராஸனம்) முதல் அலங்காராஸனம் வரையில் திருவாராதனம் ஸமாப்பிக்கவும்.

## அனந்த கருடவிஷ்வக் ஸேனாதிகளுக்கு திருவாராதனம்.

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து திருமஞ்சனத்தை பூரித்து அபிமந்த்ரித்து "ஸ்ரீமதே விஷ்வக்ஸேனாய ஸேனாதிபதயே நமஃ, அனந்தாய நாகராஜாய நமஃ, வைநதேயாய பக்ஷிராஜாய நமஃ, ஸுதர்சனாய ஹேதிராஜாய நமஃ பாஞ்சஜன்யாய சங்காதிபதயே






ஜீ. நமஃ, ஸுதர்சனாய ஹேதிராஜாயநமஃ, பாஞ்சஜன்யாய சங்காதிபதயேநமஃ" என்று திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப்பித்து பூர்வம் போலே திருவாராதனம் பண்ணுகிறது.

---

வி. நமஃ" என்று திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து பூர்வம் போலே திருவாராதனம் (அலங்காராஸனம் வரையில்) செய்யவும். ஆழ்வாராதிகளின் அர்ச்சை இல்லாமற்போனால் மானஸிகமாக செய்யவும்.

(ஜீ) மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து திருமஞ்சனத்தை பூரித்து திருத்துழாய் கொழுந்தையும் சாத்துப்படியையும் பரிமாறி உத்தரவாக்யத்தாலே அபிமந்த்ரித்து எம்பெருமான் திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை சமர்ப்பித்து "ஸ்ரீமதே நாராயணாயநம: ஸ்ரீம் ஸ்ரீயையநம: பூம் பூம்யைநம: நீம் நீளாயநம: ஸமஸ்த பரிவாராய ஸர்வமங்கள விக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாய நம: திருவடிகள் நிலைசாத்தி யருளவேணும், மந்த்ராஸனத்திற்கு எழுந்தருளவேணும் ஆசார்யன் திருக்கைகளால் திருவாராதனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஸ்ரீமதேநம: அர்க்யம் கண்டருளவேணும்" என்று எம்பெருமான் வலது கைகளிலே ஸமர்ப்பித்து கண்டருளினதாக பாவித்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்ரத்தில் நின்று உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "பாத்யம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து மீளவும் அர்க்ய பாத்ரத்தில் நின்று உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரததில் நின்றும்

---

(ஜீ) பெருமாளுக்கு திருவாராதனம்—ஸபர்யாஸனம் (மந்த்ராஸனம்)

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து திருமஞ்சனத்தை பூரித்து திருத்துழாய் கொழுந்தையும் சாத்துப்படியையும் பரிமாறி உத்தரவாக்யத்தாலே அபிமந்த்ரித்து எம்பெருமான் திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப்பித்து "ஸ்ரீமதே நாராயணாயநம: ஸ்ரீம் ஸ்ரீயைநம: பூம் பூம்யைநம:, நீர் நீளாயநம: ஸமஸ்த பரிவாராய ஸர்வமங்கள விக்ரஹாய ஸ்ரீமதே நாராயணாயநம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் மந்த்ராஸனத்துக்கு எழுந்தருளவேணும் ஆசார்யன் திருக்கைகளால் திருவாராதனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதேநம

(ஜீ) உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிக்கத்திலே சேர்த்து உத்தரணியை சோதித்து திருவொற்றுடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் சாத்தியருளவேணும், தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்," என்று விண்ணப்பம் செய்து,

மீளவும் எம்பெருமான் திருவடிகளிலே திருத்துழாய் ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் ஸ்நானத்திற்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதேநம: திருவடி விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம்செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து

---

அர்க்யம் கண்டருளவேணும்" என்று எம்பெருமான் வலது திருக்கையிலே ஸமர்ப்பித்து கண்டருளினதாக பாவித்து முக்கால் முக்கால் (மும்மூன்றுதரம்) திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய, அர்க்ய, ஆசமனீயம் சமர்ப்பித்து திருவொற்றுடை ஒருதலைப்பாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும், தலைமாறி திருவடிகளுக்கும் திருவொற்றுடை சாத்தி.

## பெருமாளுக்கு ஸ்நானம்.

மீளவும் எம்பெருமான் திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும், ஸ்நானத்திற்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, பாத்ய, அர்க்ய, ஆசமனீயங்களும், திருவொற்

(ஜீ) "திருவொற்றுடை ஒருதலையாலே திருக்கைகளுக்கு சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து ஒரு திருத்துழாய் கொழுந்தாலே திருமுத்து விளக்கி திருப்படிகத்தில் சேர்த்து கையை சோதித்து மற்றொரு கொழுந்தாலே திருநாக்கு வழித்து திருப்படிகத்திலே சேர்த்து கையைசோதித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "ஸ்ரீமதேநமஃ திருப்பவளம் மாற்றியருளவேணும், திருக்கைகள் விளக்கியருளவேணும், திருமுகமண்டலம் விளக்கியருளவேணும் திருக்கைகள் விளக்கியருளவேணும்," என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து "திருவடிகள் விளக்கியருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்தது உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து மீளவும் அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்," என்று முக்கால் முக்கால் திருப்படிகத்தில் சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்ந்து உத்தரணியை சுத்த ஜலத்திலே

---

வி. ருடை ஒருதலைப்பாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் தலைமாறி திருவடிகளுக்கும் திருவொற்றுடை சாத்தி, ஒரு திருத்துழாய் கொழுந்தாலே திருமுத்து விளக்கி திருப்படிகத்தில் சேர்த்து கையை சோதித்துக்கொண்டு மற்றொரு கொழுந்தாலே திருநாக்கு வழித்து திருப்படிகத்திலே சேர்த்து கையை சோதித்துக்கொண்டு அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதேநமஃ திருக்கைகள் விளக்கியருளவேணும், திருப்பவளம் மாத்தியருளவேணும், திருக்கைகள் விளக்கியருளவேணும், திருமுகமண்டலம் விளக்கியருளவேணும் திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய,

(ஜீ) சோதித்து "திருவொற்றுடை ஒருதலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருமுகமண்டலத்திற்கும் சாத்தியருள வேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருள வேணும்" என்று விண்ணப்பம் செய்து:

திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை சமர்ப்பித்து "ஸ்ரீமதேநம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் திருமஞ்சன வேதிகைக்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து தீர்த்த எம்பெருமான்களை வேதிகையிலே எழுந்தருளப்பண்ணி சுருளமுது சோதித்து கண்டருளப்பண்ணி திருவொற்றுடை சாத்தி "ஸ்ரீமதேநம: எண்ணெ யொலியற் சாத்தியருளவேணும் எண்ணெக்காப்பு சாத்தியருளவேணும் திருமுடிக்காப்புக்காக சாத்துப்படி சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து ஸ்நானீய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "புருஷஸூக்தம்," "ஸ்ரீஸூக்தம்," "பூஸூக்தம்," "வெண்ணெ யளைந்த குணுங்கும்" இத்யாத்யநுஸந்தானத்துடனே

---

(வி) அர்க்ய, ஆசமனீயங்களும், திருவொற்றுடை ஒருதலைப்பாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் திருமுகமண்டலத்திற்கும், தலைமாறி திருவடிகளுக்கும் திருவொற்றுடை சாத்தி:

திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும், திருமஞ்சன வேதிகைக்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து தீர்த்த எம்பெருமான்களை வேதிகையிலே (தட்டிலே) எழுந்தருளப்பண்ணி சுருளமுது (வெற்றிலை பாக்கு) சோதித்து கண்டருளப் பண்ணி திருப்பவளம் மாற்றி, அர்க்யம், ஆசமனீயம் கண்டருளப் பண்ணி திருவொற்றுடை ஒரு தலைப்பாலே திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், தலைமாறி திருவடிகளுக்கும் சாத்தி, "ஸ்ரீமதே நம: எண்ணெயொலியல் சாத்தியருளவேணும், எண்ணெக்காப்பு சாத்தியருளவேணும், திருமுடிக் காப்புக்காக சாத்துப்படி சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து ஸ்நானீய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம், பூஸூக்தம், நீளாஸூக்தம், "வெண்ணெ யளைந்த குணுங்கும்" என்கிற 10 பாட்டும்,

தீர்த்த எம்பெருமான்களுக்கு திருமஞ்சனம்பண்ணி உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே

---

(வி) முன்பொலா இராவணன் தன் முதுமதிளிலங்கைவேவித்து
அன்பினாலனுமன் வந்து ஆங்கடியிணை பணியநின்றாற்கு
என்பெலாமுருகியுக்கிட்டு என்னுடைநெஞ்சமென்னும்
அன்பினால்ஞானநீர்கொண்டு ஆட்டுவன் அடியனேனே.

மாயமான்மாயச்செற்று மருதிறநடந்துவையம்
தாயமாபரவைபொங்கத் தடவரைதிரித்துவானோர்க்கு
ஈயுமாலெம்பிரானார்க்கு என்னுடைச்சொற்களென்னும்
தூயமாமாலைகொண்டு சூட்டுவன்தொண்டனேனே.

சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள்நன்னீ
ராட்டி அந்தூபம்தராநிற்கவே அங்கு ஓர்மாயையினால்
ஈட்டியவெண்ணெய்தொடுவுண்ணப்போந்து இமிலேற்றுவன்கூன்
கோட்டிடையாடினைகூத்து அடலாயர்தம்கொம்பினுக்கே.

காடுகளூடுபோய்க்கன்றுகள்மேய்த்து மறியோடிகார்கோடல்பூச்
சூடிவருகின்றதாமோதரா கற்றுத்தூளிகாண்உன்னுடம்பு
பேடைமயிற்சாயல்பின்னைமணாளா நீராட்டமைத்துவைத்தேன்
ஆடிஅமுதுசெய்அப்பனுமுண்டிலன் உன்னோடுஉடனேயுண்பான்

"திண்ணார் வெண்சங்குடையாய் திருநாள் திருவோண மின்றேழுநாள் முன், பண்ணேர்மொழியாரைக்கூவி முளையட்டிப் பல்லாண்டுகூறுவித்தேன், கண்ணாலம் செய்யக்கறியும் கலத்ததரிசியுமாக்கி வைத்தேன் கண்ணா நீநாளைத் தொட்டுக்கன்றின் பின்போகேல் கோலஞ்செய்து இங்கேயிரு" என்கிற பாசுரங்களையும் அநுஸந்தித்துக்கொண்டே எம்பெருமான்களுக்கு திருமஞ்சனம் கண்டருளப்பண்ணி உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, அர்க்யமும், ஆசமனீயமும் சமர்ப்பித்து "திருவொற்றாடை ஒரு

(ஜீ) சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றுடை ஒருதலையாலே திருக்கைகளுக்கும் திருமுடி திருமேனி எங்கும் ஒக்க திருவொற்றுடை சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து தீர்த்த எம்பெருமான்களை கோயிலாழ்வாரிலே எழுந்தருளப்பண்ணி;

திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே சமர்ப்பித்து "ஸ்ரீமதே நமஃ திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் அலங்காராஸனத்திற்கு எழுந்தருளவேணும், திவ்ய பீதாம்பரம் சாத்தியருளவேணும் உத்தரீயம் சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திரு

---

வி. தலைப்பாலே திருக்கைகளுக்கும் திருமுடி திருமேனி யெங்கும் ஒக்க திருவொற்றுடை. சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, திருவொற்றுடை சாற்றி,* எம்பெருமான்களை கோயிலாழ்வாரில் எழுந்தருளிப்பண்ணிவிட்டு,

### பெருமாளுக்கு அலங்காராஸனம்.

திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து "ஸ்ரீமதே நமஃ திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் அலங்காராஸனத்துக்கு எழுந்தருளவேணும் திவ்ய பீதாம்பரம் சாத்தியருளவேணும் உத்தரீயம் சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து அர்க்ய, பாத்ய, அர்க்ய, ஆசமனீயங்களும், திரு

---

* "சாலக்ராம மார்சனம் க்ருத்வா" என்கிற வாக்யங்களால் ஸாலக்ராமத்திற்கு மார்ஜனம் (வஸ்த்ரத்தால் துடைப்பு) அவசியம் என்று தெரிகிறது. ஆனால் "சிலாயாம் ஸ்நாபனம்" என்கிற வசனத்தின்படி சர்வேச்வரனுடைய திருமேனி ஸ்தானமாய், சதாதீர்த்தத்திலேயே இருந்துகொண்டு அசனல் "தீர்த்தம் எம்பெருமான்" என்ற பெயரை உடைய சாலக்ராமத்திற்கு மார்ஜனம் வேண்டியதில்லை. மார்ஜனத்தை உபசாரமாக விக்ரஹாதிகளிருந்தால் அவ்விடத்தில் செய்யவும் என்று சிலர் அபிப்ராயம் இதின் நிஷ்கர்ஷையை பெரியோர்களிடமிருந்து தெரிந்துகொள்க. முடியுமாகில் மறுபதிப்பில் இவ்விஷயத்தைப்பற்றி நிஷ்கர்ஷித்து எழுதப்படும்.

(ஜீ) மஞ்சனத்தை எடுத்து "அர்க்யம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருவடிகள் விளக்கி யருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து மீளவும் அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம்செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றாடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றாடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து:

திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே சமர்ப்பித்து "ஸ்ரீமதேநம: திருமண்காப்பு சாத்தியருளவேணும், ஸ்ரீசூர்ண

---

(வி) வொற்றாடை ஒரு தலைப்பாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும், தலைமாறி திருவடிகளுக்கும் சாத்தி திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநம: திருமண்காப்பு சாத்தியருளவேணும், ஸ்ரீசூர்ணகாப்பு சாத்தியருளவேணும், திருயஜ்ஞோபவீதம் சாத்தியருளவேணும்" என்று * திருமண்காப்பு ஸ்ரீசூர்ணகாப்பு, யஜ்ஞோபவீதாதிகளை ஸமர்ப்பித்து, "சாத்துப்படி சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, (6) 'கந்த த்வாராம் துராதர்ஷாம் நித்ய புஷ்டாம் கரீஷிணீம் ஈச்வரீம் ஸர்வ பூதானாம் த்வாமிஹோப ஹ்வயேச்ரியம்,'

---

*"உத்தராத்யு பரிபக்தஜனனி த்யூர்த்வதா ச்ரேணஸூ ஸிதபக்திம் ஊர்த்வபுண்ட்ரதிலகம் ப்ஹுமானத் தஞ்சி பர்ஷிவாத ஸ்வஸலாடே" என்கிற ச்லோகத்தை இந்த சமயத்திலநுஸந்திப்பதுண்டு.

ஜீ. காப்பு சாத்தியருளவேணும், திருயஜ்ஞோபவீதம் சாத்தியருள வேணும், சாத்துப்படி சாத்தியருளவேணும் " என்று (6) " கந்தத் வாரான்," "பூசும் சாந்தும்" இத்யாத்யநு ஸந்தானத்துடனே சாத்துப்படி சாத்தி "திருப்படித்தாமம் சாத்தியருளவேணும்" என்று (7) ஸ்புரத்கிரீடாங்கத ஹாரகண்டிகா" (8) ஸ்வோசித விவித" "மங்குல் தோய் சென்னி," "சூட்டு நன்மாலைகள்," இத்யாத்யநு ஸந்தானத்துடனே "கிரீடாதிநூபுராந்தமான திவ்யாபரணங்களையும், சங்கசக்ராத்யாயுதங்களையும் சாத்தியருள வேணும், திருமாலை சாத்தியருளவேணும், திருக்கண்ணாடி கண்டருளவேணும்" என்று திருத்துழாய் கொழுந்தாலே கண்டரு

---

(வி) "பூசும் சாந்தென் நெஞ்சமே புனையும் கண்ணி எனதுடைய வாசகம் செய்மாலையே வான்பட்டாடையுமஃதே தேசமானவணிகலனு மென்கை கூப்புச் செய்கையே ஈசன் ஞாலமுண்டுமிழ்ந்த எந்தை ஏகமூர்த்திக்கே," முதலானவைகளை அநுஸந்தித்துக்கொண்டே சாத்துப்படி சாத்தி, "திருப்படித்தாமம் சாத்தியருள வேணும்" என்று விண்ணப்பம் செய்து, (7) 'ஸ்புரத்கிரீடாங்கத ஹாரகண்டிகா மணீந்த்ர காஞ்சீகுணநூபுராதிபி: ரதாங்க சங்காஸி கதா தனுர்வரைர்லஸத்துலஸ்யா வநமாலயோஜ்வலசம்' "ஸ்வோசித விவித விசித்ராநந்தாச்சர்ய நித்யநிரவத்ய நிரதிசய ஸுகந்த நிரதிசயஸு கஸ்பரிச நிரதிசயௌஜ்வல்ய கிரீடமகுட சூடாவதம்ஸ மகரகுண்டலக்ரைவேயக ஹாரகேயூரகடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப முக்தாதாமோதர பந்தன பீதாம்பர காஞ்சீகுணநூபுராத்ய பரிமித திவ்யபூஷண,"

"மங்குல் தோய் சென்னி வடவேங் கடத்தானை கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான் திங்கள் சடையேற வைத்தானும் தாமனுர மேலாப்குடையேறத்தாம் குவித்துக் கொண்டு";

"சூட்டுநள் மாலைகள்.........கொம்பினுக்கே," இத்யாதிகளை அநுஸந்தித்துக் கொண்டே, "கிரீடாதிநூபுராந்தமான திவ்யாபரணங்களையும் சங்க சக்ராத்யாயுதங்களையும் சாத்தியருள வேணும், திருமாலை சாத்தியருளவேணும், திருக்கண்ணாடி கண்டருளவேணும்" என்று திருத்துழாய் கொழுந்தாலே கண்டருளப் பண்ணி,

"பரிவிகிலீசனைப்பாடி விரிவது மேவலுறுவீர் பிரிவகையின்றி நன்னீர் தூய்புரிவதுவும் புகைபூவே",

ஜீ ளப்பண்ணி, 'பரிவதிலீசனைப்பாடி,' இத்யாத்யநுஸந்தானத்துடனே தூபம் கண்டருளப்பண்ணி, "வையந் தகளியா," "அன்பே தகளியா," "திருக்கண்டேன்," "வடிக்கோல்வாள் நெடுங்கண்" இத்யாத்யநுஸந்தானத்துடனே "தீபம் கண்டருளவேணும், கந்த, புஷ்ப, தூப, தீப, ந்ருத்த, கீத, வாத்ய, சத்ர, சாமர, தாலவ்ருந்தாதி சர்வோபசாரங்களையும் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, "திருப்பல்லாண்டு," "திருப்பாவை" விண்ணப்பம் செய்து:

---

வி. * இத்யாதிகளை அநுஸந்தித்துக்கொண்டே தூபம் கண்டருளப்பண்ணி,

"வையந்தகளியா ஆர்கடலே நெய்யாக வெய்யகதிரோன் விளக்காக செய்ய சுடராழி யானடிக்கே சூட்டினேன்சொல்மாலை இடராழி நீங்குகவே யென்று,"

"அன்பேதகளியா வார்வமே நெய்யாக இன்புருகுசிந்தை யிடுதிரியா நன்புருகி ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்தநான்,"

"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழூமருக்கனணிநிறமும் கண்டேன் செறுக்கிளரும் பொன் னாழிகண்டேன் புரிசங்கம்கைக்கண்டேன் என்னாழி வண்ணன் பாலின்று,"

"வடிக் கோல்வாள் நெடுங்கண் மாமலராள் செவ்விப்படிக் கோலம் கண்டகளாள் பலனுள்அடிக் கோலிஞாலத்தாள் பின்னும் நலம் புரிந்த தென்கொலோ கோலத்தால் இல்லை குறை."

0 இத்யாதிகளை அநுஸந்தித்துக் கொண்டு "தீபம் கண்டருளவேணும், கந்த, புஷ்ப, தூப, தீப, ந்ருத்த, கீத, வாத்ய, சத்ர சாமர,. தாலவ்ருந்தாதி ஸர்வோபசாரங்களையும் கண்டருளவேணும்," என்று விண்ணப்பம் செய்து, () 'திருப்பல்லாண்டு,'

---

* "தூரஸி தூர்வதூர்வம்தம் தூர்வதம் யோஸ்மான் தூர்வதிதம் தூர்வயம்வயம் தூர்வாமஸ்மின் தேவானுமஸி" என்பதை இவ்விடத்தில் அநுஸந்திப்பதுண்டு.

0 "உத்தீப்யஸ்ய ஜாதவேதோபக்னன்னிருருதிம்மம பசூகுச்சமஹ்ய மாவஹ ஜீவனம்சதிசோதச" என்பதை இங்கு அநுஸந்திப்பதுண்டு.

() இவ்விடத்தில் மந்தரபுஷ்பத்தை அநுஸந்தித்துதத்தன் மந்தரங்களாலாவது (கேசவாதி நாமங்களாலாவது) அஷ்டோத்தரங்களாலாவது அர்ச்சனைசெய்வது ஸம்ப்ரதாயஸித்தம் (மந்தர புஷ்பத்திற்கும் அர்ச்சனைக்கும் கடைசியில் பார்க்கவும்.)

(ஜீ) மீளவும் பஞ்சபாத்திரங்களையும் சோதித்து திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே சமர்ப்பித்து, "ஸ்ரீமதே நம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் போஜ்யாஸனத்துக்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து பாத்ய பாத்திரத்தில்

---

(வி) திருப்பாவை* விண்ணப்பம் செய்து.

## பெருமாளுக்கு போஜ்யாஸனம்.

மீளவும் பஞ்சபாத்ரங்களையும சோதித்து திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து "ஸ்ரீமதே நம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும் போஜ்யாஸனத்திற்கு எழுந்தருள

---

* திருப்பல்லாண்டு, திருப்பாவை தவிர மற்றும் சில நித்யாநுஸந்தேயமான ப்ரபந்தங்களும் ஸேவிப்பதுண்டு. அனத்யயன காலத்தில் (அதாவது திருக்கார்த்திகை முதல் தைமாதம் ஹஸ்த நக்ஷத்திரம் வரையில். இது விஷயம் தேசபேதேன பேதமுடையதாய் இருக்கிறது. மேற்சொன்ன அனத்யயன காலம் காஞ்சீமண்டலத்தின் அநுஷ்டானப்படி) திருவாய்மொழி நூற்றந்தாதி உபதேச ரத்தினமாலை, நாலாயிரத் தனியன்களும், அனத்யயன காலமானாலும் மார்கழி மாதத்தில் மாத்திரம் திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவையும்கூட, ஸேவிப்பது வழக்கம் ஆனால் இத்திருவாராதன க்ரமத்தில் ஆங்காங்கு உதஹரிக்கப்பட்ட விடுதி பாசுரங்களுக்கு அனத்யயனம் என்கிற நிர்ப்பந்தம் உண்டா இல்லையா என்றால்—இரண்டுவிதமும் அநுஷ்டானத்திலிருக்கிறது. ஆகையால் அவரவர்கள் சிஷ்டாசாரப்படி செய்யவும்.

அனத்யயனம் என்கிற நிர்ப்பந்தத்தை வைத்துக்கொண்டு அநுஸந்திக்காமல் அவைகளுக்கு பதில் பூர்வர்களிட்டருளிய ச்லோகங்களில் ப்ரகரணத்துக்குச் சேர்ந்தவைகள் சிலவற்றை அநுஸந்திக்கலாம். ஸம்ஸ்க்ருத வேதத்துக்கு அனத்யயன காலமான வசந்தகாலத்தில் நடக்கும் யாகங்களுக்கு அங்கமாக அத்யயனம் அவசியம் பண்ணியே தீரவேண்டியதான வேதாத்யயனத்தை எப்படி "அனத்யயனம்" என்கிற நிர்பந்தம் பாதிக்கமாட்டாதோ அது போல் "மந்த்ரோ யாகச்சபஞ்சம:" என்கிற திருவாராதனமான யாகத்திற்கு அங்கமான விடுதி பாசுரங்களுக்கு இந்த குற்றம் வாராது அனத்யயன காலத்தில் நடக்கும் ப்ரபந்தங்களின் வ்யாக்யானங்களிலுதஹரிக்கப்பட்ட பாசுரத்தை அநுஸந்தித்தால் தோஷம் வாரததுபோல் இங்கும். ஆநுபூர்வியாகத்தான் அநுஸந்திக்கக்கூடாது. மேலும் நித்யமாகச் செய்யும் ஸந்த்யாவந்தனாதிகளைப்போல் திருவாராதனத்தில் உள்ள இதற்கு அந்த நிர்பந்தம் கிடையாது என்று அநுஸந்திக்கலாம்.

ஜீ. நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை எடுத்து, "ஸ்ரீமதே நமஃ திருவடிகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்தில் சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து திருவொற்றாடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் தலைமாறி திருவடிகளுக்கும சாத்தி:

திருமுன்பே ஸ்தல சுத்திபண்ணி திருப்போனகம் சமர்ப்பித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்து திருப்போனகத்தை உத்தர வாக்யத்தாலே ப்ரோக்ஷித்து பரிஷேசனம் பண்ணி ஆபோசனம் சமர்ப்பித்து த்வயத்தாலே அபிமந்த்ரித்து இரண்டு கூறாக பாவித்து அதில்வொரு பாகம் எம்

---

வேணும்" என்று விண்ணப்பம் செய்து பாத்ய, அர்க்ய, ஆசமனீயங்கள் சமர்ப்பித்து திருவொற்றாடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும், தலைமாறி திருவடிகளுக்கும் திருவொற்றாடை சாற்றி, திருமுன்பே ஸ்தல சுத்திபண்ணி திருப்போனகம் (ப்ரஸாதாதிகள்) ஸமர்ப்பித்து() அர்க்ய மாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே திருமஞ்சனத்தை யெடுத்து திருப்போனகத்தை உத்தர வாக்யத்தாலே ப்ரோக்ஷித்து திருத்துழாய் சொழுந்துகளை பரிமாறி, மறுபடியும் அர்க்ய பாத்திரத்திலிருந்து

---

() ப்ரஸாதத்தை பெருமாள் திருமுன்பே சமர்ப்பிக்கும் க்ரமமாவது— நெய் சேர்க்கப்பட்ட ப்ரஸாதம், திருக்கண்ணமுது, திருப்பணி யாரங்கள், பருப்பு, வ்யஞ்சனம், பச்சடி, கெழுக்ராமுது, சாத்திமது, தயிரமுது. இந்த க்ரமத்தில் தளிகை ஸமர்ப்பித்து ஒவ்வொன்றிலும் (தயிர் போன்றவைகளில் தவிர) நெய்யமுது சேர்த்து, தனியாக நெய்யமுது ஸமர்ப்பிக்கவும்.

ஜீ. பெருமான்களுக்கும் மற்றொரு பாகம் பிராட்டிமார்களுக்குமாக பாவித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தையெடுத்து இடது கையிலே வைத்துக்கொண்டு திருப்போனகத்தை ஆசார்யன் ஆமலகப்ரமாணம் எம்பெருமான் வலது திருக்கையிலே ஸமர்ப்பிக்குவதாகவும் கண்டருளகிறதாகவும் பாவித்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பானீய பாத்திரத்தில்

---

ஒரு உத்தரணி தீர்த்தம் எடுத்து ஸகல பதார்த்தங்களையும் உத்தர வாக்யத்தாலே ப்ரோக்ஷித்து பர்ஷேசனம்பண்ணி (அதாவது வளைத்துக்கட்டி) ஆபோசனம் ஸமர்ப்பித்து ஒவ்வொரு பதார்த்தத்தையும் வலது கையால் மூடிக்கொண்டு த்வயத்தாலே அபிமந்திரித்து * ஒரு பாகம் எம்பெருமான்களுக்கும் மற்றொரு பாகம் பிராட்டிமார்க்குமாக பாவித்து, அர்க்யம் ஸமர்ப்பித்து உத்தரணியை சோதித்து, அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை யெடுத்து முகத்துக்கு ஸரியாக இடது கையிலே உத்தரணியை வைத்துக்கொண்டு வலது கையால் மூடிக்கொண்டு ஸ்வாசார்யன் முதல் திருவனந்தாழ்வான் பர்யந்தமாக ப்ரார்த்தித்து திருப்போனகத்தை (முன்பு இரண்டு பாகமாக செய்து வைத்ததில் ஒன்றை) ஆசார்யன் ஆமலக (நெல்லிக்காய்) ப்ரமாணம் எம்பெருமான் வலது திருக்கையிலே ஸமர்ப்பிக்குவதாகவும் கண்டருளுகிறதாகவும் பாவித்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பானீய பாத்திரத்தில் நின்றும் (அதாவது அர்க்ய பாத்திரத்தில் நின்றும்) திருமஞ்சனத்தை யெடுத்து "ஸ்ரீமதே நமஃ பானீயம் கண்டருளவேணும்" என்று பானீயம் கண்டருளப்பண்ணி,

---

* "த்ரவ்யாணாம்..............அஷ்டபாகம் ப்ரகல்பயதே" என்றபடி மொத்த ப்ரஸாதத்தையும் இரண்டு பாகமாகச் செய்து இரண்டையும் இரண்டு தரம் பெருமாளுக்கு அமுது செய்வித்து இரண்டையும் ஒன்றுசேர்த்து மூன்றாக பாவித்து, ஸ்ரீ, பூ, நீளாதேவிகளுக்கு அமுது செய்யப்பண்ணி, மூன்றையும் ஒன்று சேர்த்து இரண்டாக பாவித்து ஒன்று அனந்த கருட விஷ்வக் ஸேனாதிகளுக்கும், மற்றது ஆழ்வாராதிகளுக்கும் ஸமர்ப்பித்து இரண்டையும் ஒன்று சேர்த்து ஸ்வாசார்யனுக்கு அமுது செய்விக்கவும். அனந்த கருடாதிகளுக்கு அமுது செய்வித்ததைப் ப்ரத்யேகமாக வைக்க வேணும் ஆசார்யாதிகளுக்கு உபயோகிக்ககூடாது. என்று சிலர் அபிப்ராயம்.

நின்றும் திருமஞ்சனத்தை யெடுத்து பானீயம் கண்டருளப்பண்ணி "நாறுநறும் பொழில்," "இன்று வந்தித்தனையும்,', "பச்சை மாமலைபோல்மேனி," "மிக்கானை மறையாய்," 'அடியேன் மேவி,' "அன்னஸூக்தம்," "மதுஸூக்தம்," (9) "யாப்ரீதிர் விதுரார்

(வி) நாறுநறும் பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான்
நூறுதடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவிவைத்தேன்
நூறுதடாநிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்
ஏறுதிருவுடையான் இன்றுவந்திவைகொள்ளுங்கொலோ.

இன்றுவந்தித்தனையும் அமுதுசெய்திடப்பெறில்நான்
ஒன்று நூறாயிரமாக்கொடுத்து பின்னுமாளுஞ்செய்வன்
தென்றல்மணங்கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள்
நின்றபிரான்அடியேன் மனத்தேவந்துநேர்படிலே.

பச்சை மாமலைபோல் மேனி பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா அமரரேறே ஆயர்தம் கொழுந்தே என்றும்
இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகமாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே.

மிக்கானை மறையாய விரிந்த விளக்கை என்னுள்
புக்கானை புகழ்சேர் பொலிகின்ற பொன் மலையை
தக்கானைக்கடிகை தடங்குன்றின்மிசை யிருந்த
அக்காரக்கனியை அடைந்துய்ந்துபோனேனே.

அடியேன் மேவியமர்கின்ற வமுதே இமையோரதிபதியே
கொடியா வடுபுள்ளுடை யானே கோலக்கனிவாய் பெருமானே
செடியார் வினைகள் தீர்மருந்தே திருவேங்கடத்தெம்பெருமானே
நொடியார் பொழுது முனபாதம் காண நோலாதாற்றேனே.

என்கிற பாசுரங்களையும், அன்னஸூக்தம், மதுஸூக்தம், (9) "யாப்ரீதிர் விதுரார்பிதே முரரிபோ குந்த்யர்பிதே யாத்ருசீயா கோவர்தன மூர்த்னி யாச ப்ருதுகே ஸ்தன்யே யசோதார்பிதே பாரத்வாஜ ஸமர்பிதே சபரிகாதத்தேதரே யோஷிதாம் யாப்ரீதிர் முனிபத்னி பக்திரசிதேப்யத்ரா பிதாம் தாம்குரு," (10) "பிப்ரத் வேணும் ஜடரபடயோஃ ஸ்ருங்க வேத்ரேசகக்ஷே, வாமே பாணௌ மஸ்ருண கபளம் தத்பலாந்யங் குளீஷு திஷ்டந்மத்யே ஸ்வபரி ஸுஹ்ருதோ ஹாஸயந்நர்மபிஸ்வைஃ,

(ஜீ) ப்பிதே" (10) "பிப்ருத்வேணும்" இத்யாத்யது ஸந்தானத்துடனே திருப்போனகம் கண்டருளப்பண்ணி பானீயம் கண்டருளப்பண்ணி பிராட்டிமார்களுக்கும் யதாபாகமாக கண்டருளப்பண்ணி பானீயம் கண்டருளப்பண்ணி உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை யெடுத்து, "ஸ்ரீமதே நம: திருப்பவளம் மாற்றியருள்வேணும், திருக்கைகளும் விளக்கி யருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து மூக்கால் மூக்கால் திருப்படிகத்தில் சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை யெடுத்து "திருவடிகள் விளக்கி யருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து மூக்கால் மூக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணி

---

ஸ்வர் கேலோ கேமிஷதிபுபுஜே யஜ்ஞுபுக் பாலகேளிம் (பாகவ 10, 13, 11.) இத்தியாதிகளை அநுஸந்தித்துவிட்டு, * க்ராஸமுத்ரை (ஐந்து விரலையும் ஒன்றாய் சேர்க்கை) யினால் ப்ரஸாதாதிகளை பெருமாளுடைய ஒவ்வொரு திருநாமத்திற்கும் மும்மூன்று தாம் [உத்தரவாக்யம் ஆதியாகவும், தத்தந்மந்த்ரங்கள் சதுர்த்யந்தமாகவும், ப்ரஸாதாதிகள் ப்ரதமாந்தமாகவும்: "கண்டருளவேணும்" என்பது முடிவாகவும் (உதாரணம் ஸ்ரீமதே நாராயணாய, ஸ்ரீவேங்கடேசாய அல்லது க்ருஷ்ணாய, 0 திருப்போனகம் கண்டருளவேணும்) சொல்லி பெருமாள் திருக்கையில் ஸமர்ப்பிப்பதாயும் அவர் திருக்கையினால் திருப்பவளத்திலிட்டு அமுது செய்வதாகவும் பாவித்து] கண்டருளப்பண்ணி, பானீயம் கண்டருளப்பண்ணி,

---

* பவித்திரவிரல், நடுவிரல், கட்டைவிரல், இம்மூன்றையும் ஒன்று சேர்த்து காட்டும் முத்திரைக்கு க்ராஸமுத்திரை என்று பெயர். இந்த முத்திரை ஹோமம் செய்யும்போதும், சாப்பிடும்போது ப்ராணாஹுதி செய்யும் காலத்திலும் உபயோகிக்கவும், ஐந்து விரலையும் ஒன்றாக சேர்த்து காட்டும் முத்திரைக்கு 'மஹாக்ராஸமுத்ரை என்று பெயர். இது பகவந்நிவேதநகாலத்திலுபயோகிக்கவும்.

0 சிலர் அந்தந்த பதார்த்தங்களின் பெயரைச் சொல்லி அமுது செய்யப்பண்ணுவது முண்டு. ஆனால் ஸம்ப்ரதாய ரீதியை கவனிக்கும்பக்ஷத்தில் "போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே" என்றபடி "போனகம்" என்று பொதுவாகச் சொல்லுவதுதான் அழகென்று தோன்றுகிறது.

ஜீ. யை சுத்த ஜலத்திலேசோதித்து மீளவும் அர்க்ய பாத்திரத்தில் நின்றும் தீர்த்தத்தை யெடுத்து “திருக்கைகள் விளக்கியருளவே ணும்” என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படி கத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆச மன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை யெடுத்து

---

பெருமாளுக்கு கண்டருளப்பண்ணப்பட்ட பாகத்தைவிட்டு மற்ற பாகத்தை “திவ்ய மஹிஷீப்யோநம:” என்று பிராட்டிமார்களுக்கும் கண்டருளப்பண்ணி பானீயம் கண்டருளப்பண்ணி, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் தீர்த்தமெடுத்து “ஸ்ரீமதேநம: திருப்பவளம் மாற்றியருளவேணும், திருக்கைகள் விளக்கியருளவேணும்” என்று விண்ணப்பம் செய்து மூன்று தரம் திருப்படிகத்திலே சேர்த்து, உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து, பாத்ய, அர்க்ய, ஆசமனீயம் சமர்ப்பித்து, திருவொற்றாடை ஒரு தலைப்பாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும், தலைமாறி திருவடிகளுக்கும் சாற்றவும். இது வரையில் இரண்டாக பாகம் செய்த ப்ரஸாதாதிகளை ஒன்றாக சேர்த்து மறுபடியும் இரண்டாக பாகம் செய்து ஒரு பாகம் அனந்த கருட விஷ்வக்ஸேனாதிகளுக்கும் மற்றொரு பாகம் *பராங்குச

---

* திருவத்யயன காலத்தில் ஆழ்வாராதிகளுக்கும் பிராட்டிக்கும் திருப்போனகத்தைக் கண்டருளப் பண்ணக்கூடாதென்று சிலர் அபிப்ராயம். மற்றும் சிலர் அபிப்ராயம் கூடுமென்று. இதற்கு காரணமும் ப்ரமாணமும் கீழ் வருமாறு கண்டுகொள்க—ஸ்ரீமந்நிகமாந்த தேசிகன் அருளிச்செய்தபடி அபிநவதசாவதாரமான ஆழ்வார்களிடத்தில் ப்ராம்மண சூத்ரத்வாதி ஜாதி பேதங்கள் பண்ணக்கூடாதாகையால் அவர்களுக்கு அமுது செய்யப்பண்ணப்பட்ட பதார்த்தம் ச்ராத்தார்ஹமென்று சொல்லக்கூடாது. உசன ஸ்ம்ருதியில் “விஷ்ணவே கல்பிதம் சாந்நம் தத்யாத் பக்தேப்ய ஏவசவை ச்வதேவும் தத:குர்யாத் ஸ்ராத்தகர்மாதிகம்ததா” என்று எம்பெருமானுக்கும், அவனடியார்களுக்கும் அமுது செய்யப்பண்ணின வனந்தரம் வைச்வதேவத்தைச் செய்து சராத்தத்தை செய்யும்படி சொல்லியிருக்கிறது. இது வுமன்றியும் “யதன்ன: புருஷோபவதி ததந்நா: தஸ்யதேவதா:” என்றபடி தான் புஜிக்கும் அன்னத்தையே அவனுடைய பித்ருதேவதைகளுக்கு உபயோகப்படுத்தவேண்டுமென்றும், பகவத் பாகவதர்களுக்கு சேஷமாக்கின அன்னத்தைதான் அவன் சாப்பிடவேண்டும் என்று சொல்லியிருக்கிறது. ஆழ்வாராதிகளின் சரீரங்களிலுள்ள அந்தர்யாமியின் ஆராதனம் பித்ருசரீரக அந்தர்யாம்யாராதனரூபம்தான் பிராட்டிக்கு நிவேதிதமான அன்னம் ச்ராத்தத்துக்கு உபயோகப்படாதென்றால்—பிராட்டி ஈச்வரகோடி கடித்தை என்றும் அவளுக்கு மோக்ஷப்ரதத்வாதிகளுண்டென்கிற பக்ஷத்திற்கு விரோதம்.

ஜீ. "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம்செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து "திருவொற்றுடை ஒரு தலையாலே திருக்கைகளுக்கும் திருப்பவளத்திற்கும் சாத்தியருளவேணும் தலைமாறி திருவடிகளுக்கு திருவொற்றுடை சாத்தியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து:

"ஸ்ரீமதே விஷ்வக்ஸேனாயநம:, அனந்தாயநாகராஜாயநம:, வைநதேயாய பக்ஷிராஜாயநம:, ஸுதர்சனாயஹேதிராஜாயநம:, பாஞ்சஜன்யாய சங்காதிபதயேநம:, திருப்போனகம் யதாபாகமாக கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து பானீயம் கண்டருளப்பண்ணி திருவொற்றுடை சாத்தி:

"ஸ்ரீமத்ப்ய: பராங்குச பரகாலாதிப்யோநம:" என்று திருப்போனகம் யதா பாகமாக கண்டருளப்பண்ணி பானீயம் கண்டருளப்பண்ணி,

---

(வி) பரகாலாதிகளுக்கும் ஸமர்ப்பித்து, இரண்டையும் ஒன்றாக கலந்து, மொத்தத்தையும் ஆசார்யனுக்கு ஸமர்ப்பிக்கவும்.

அனந்த கருட விஷ்வக்ஸேனாதிகளுக்கு போஜ்யாஸனம்.

திருத்துழாய் கொழுந்தால் போஜ்யாஸனம் ஸமர்ப்பித்து, "ஸ்ரீமதே விஷ்வக்ஸேனாயநம:, அனந்தாய நாகராஜாயநம:, வைநதேயாய பக்ஷிராஜாயநம:, ஸுதர்சனாய ஹேதிராஜாயநம:, பாஞ்சஜன்யாய சங்காதிபதயேநம:, திருப்போனகம் யதாபாகமாக கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து திருப்போனகம் கண்டருளப்பண்ணி பானீயம் கண்டருளப்பண்ணி, திருப்பவளம் மாற்றி, அர்க்யம், பாத்யம், அர்க்யம், ஆசமனீயம் ஸமர்ப்பித்து திருவொற்றுடை சாற்றவும்.

## ஆழ்வார்கள், உடையவர், மணவாள மாமுனிகள் ஸ்வாசார்யன் முதலானோர்க்கு போஜ்யாஸனம்.

அனந்த கருட விஷ்வக்ஸேனாதிகளுக்கு கண்டருளப்பண்ணினதுபோலவே மற்ற பாகத்தை "ஸ்ரீமதே பராங்குச பரகாலாதிப்யோநம:" என்று ஆழ்வாராதிகளுக்கும், "ஸ்ரீமதே ராமாநுஜாய நம:" என்று உடையவருக்கும் "ஸ்ரீமத் வரவரமுனயேநம:"

(ஜீ) "ஸ்ரீமதேராமாநுஜாயநம:" என்று ஸ்ரீஉடையவருக்கு திருப்போனகம் கண்டருளப்பண்ணி அனந்தரம் ஆசார்யனுக்கும் கண்டருளப்பண்ணி :

மீளவும் பஞ்சபாத்ரங்களையும் சோதித்து தீர்த்தம் பூரித்து அபிமந்த்ரித்து சோஷித்து திருத்துழாய் திருவடிகளிலே ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநம: திருவடிகள் நிலைசாத்தியருளிவேணும் மந்த்ராஸனத்துக்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து அர்க்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்து "அர்க்யம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து

வி. என்று மணவாள மாமுனிகளுக்கும் 'அஸ்மத் குருப்யோநம:' என்று ஸ்வாசார்யனுக்கும், முதலில் ஆழ்வாராதிகளுக்கும், அனந்தரம் உடையவருக்கும், அனந்தரம் மணவாளமாமுனிகளுக்கும், அநந்தரம் ஸ்வாசார்யனுக்கும் திருப்போனகம் கண்டருளப்பண்ணி பானீயம் கண்டருளப்பண்ணி, திருப்பவளம் மாற்றி, அர்க்ய, பாத்ய, அர்க்ய ஆசமனீயங்கள் ஸமர்ப்பித்து திருவொற்றுடை ஸமர்ப்பிக்கவும்.

பெருமாளுக்கு மந்த்ராஸனம்.

மீளவும் பஞ்சபாத்திரங்களையும் சோதித்து திருமஞ்சனத்தை பூரித்து அபிமந்த்ரித்து சோஷித்து திருத்துழாய் கொழுந்தை திருவடிகளிலே ஸமர்ப்பித்து "ஸ்ரீமதேநம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும், மந்த்ராஸனத்துக்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, அர்க்ய பாத்ய, அர்க்ய, ஆசமனீயங்கள் ஸமர்ப்பித்து திருவொற்றுடை ஒரு தலைப்பாலே திருக்கைகளுக்கும், திருப்பவளத்திற்கும், தலைமாறி திருவடிகளுக்கும் சாற்றி, அருளமுது (வெற்றிலை பாக்கு) சோதித்து (11) * "[கனஸார விரோ (ரிலோ) தக்ரை: க்ரமுகாஷ்டக ஊஸ்ஸஹ (தளாநவிதை:) விமலானிசதாம் பூலதளானி ஸ்வீகுருப்ரபோ]" என்கிற ச்லோகாநுஸந்தானத்துடனே அருளமுது கண்டருளப்பண்ணி அர்க்ய

* இந்த ச்லோகத்திற்கு ஆகரம் தெரியாததால், அனேக வித்வான்களிடத்தில் விண்ணப்பம் செய்தும் சலோகம் கிடையாமலிருந்து, ஒரு ஸ்வாமியின் மஹோபகாரததால் கிடைத்தது ஆனால் இந்த ச்லோகம் அவ்வளவு சரியாக இல்லைபோல் தோற்றுகிறது. ஆகையால் இந்த ச்லோகத்தை தெழுந்த மஹான்கள் உபகரித்தால் மிகவும் ஸஹகாரியாயிருக்கும்.

(ஜீ) முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து பாத்ய பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்து "பாத்யம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை யெடுத்து "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்

---

(வி) பாத்திரத்தில் நின்றும் உத்தாணியாலே தீர்த்தத்தை எடுத்து திருப்பவளம் மாற்றி, அர்க்ய, ஆசமனீயங்கள் சமர்ப்பித்து திருவொற்றுடை சாற்றவும்.

அனந்த கருட விஷ்வக் ஸேனாதிகளுக்கும் ஆழ்வாராதிகளுக்கும் மந்த்ராஸனம்.

திருத்துழாய் கொழுந்துகளை எடுத்துக்கொண்டு மந்த்ராஸனம் ஸமர்ப்பித்துவிட்டு;

(12) லக்ஷ்மீ சரண லாக்ஷாங்கஸாக்ஷத் ஸ்ரீவத்ஸ வக்ஷஸே
க்ஷேமங்கராய ஸர்வேஷாம் ஸ்ரீரங்கேசாய மங்களம்.
ஸ்ரீயঃகாந்தாய கல்யாண நிதயே நிதயேர்தினம்
ஸ்ரீ வேங்கட நிவாஸாய ஸ்ரீனிவாஸாய மங்களம்.
அஸ்து ஸ்ரீஸ்தன கஸ்தூரிவாஸனவாஸித தோரஸே
ஸ்ரீஹஸ்திகிரி நாதாய தேவராஜாய மங்களம்,
கமலாகுச கஸ்தூரி கர்தமாங்கித வக்ஷஸே
யாதவாத்ரி நிவாஸாய ஸம்பத் புத்ராய மங்களம்,*
ஸ்ரீமத்யை விஷ்ணு சித்தார்ய மனோநந்தன ஹேதவே
நந்த நந்தன ஸுந்தர்யை கோதாயை நித்ய மங்களம்,

---

* இந்த ச்லோகத்திற்கு அனந்தரம், "நீலாசல நிவாஸாய நித்யாய பரமாத்மனே ஸுபத்ரப்ராண நாதாய ஸ்ரீஜகந்நாதாய மங்களம்" என்று ஸ்ரீ ஜகந்நாதத்தெம்பெருமான் விஷயமாயும், "மங்களம் கோஸலேந்த்ராய மஹனீய குணப்தயே (குணாத்மனே) சக்ரவர்தி தனூஜாய ஸார்வபௌமாய மங்களம்" என்று சக்ரவர்த்தி திருமகன் விஷயமாயும, இப்படி அவரவர்களுக்கு அபிமதமான எம்பெருமான்களின் விஷயமான மங்கள ச்லோகங்களையும் அநுஸந்திப்பதுண்டு.

ஜீ. கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை யெடுத்து "ஆசமனம் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து திருவொற்றுடை சாத்தி, சுருளமுது சோதித்து (11) 'கனஸார' என்கிற ச்லோகாநுஸந்தானத்துடனே சுருளமுது கண்டருளப்பண்ணி அர்க்ய பாத்திரத்தில் நின்றும் தீர்த்தத்தை எடுத்து திருப்பவளம் மாற்றி "திருக்கைகள் விளக்கியருளவேணும்" என்று முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே

---

வி, ஸ்ரீநகர்யாம் மஹாபுர்யாம் தாம்ரபர்ண் யுத்தரேதடே
ஸ்ரீதிந்த்ரிணி மூலதாம்னே சடகோபாய மங்களம்.

ஸ்ரீமன் மஹாபூதபுரே ஸ்ரீமத் கேசவ யஜ்வந
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம்.

0 ஸ்ரீமதே ரம்யஜாமாத்ரு முனீந்த்ராய மஹாத்மனே
ஸ்ரீரங்கவாஸினி பூயாந்நித்ய ஸ்ரீர்நித்ய மங்களம்.

மங்களாசாஸன பரை: மதாசார்ய புரோகமை:
ஸர்வைச்சபூர்வை ராசார்யை: ஸத்க்ருதா யாஸ்து மங்களம்,"

என்கிற ச்லோகங்களை அநுஸந்தித்துக்கொண்டு* கற்பூர நீராஞ்சனம் ஸமர்ப்பித்து."

## சாற்று முறை.

() "சிற்றம் சிறுகாலே.........மாற்றேலோ ரெம்பாவாய்,"
"வங்கக்கடல் கடைந்த.........இன்புறுவ ரெம்பாவாய்,"

---

0 இந்த ச்லோகம் மணவாள மாமுனிகள் விஷயமாகையால் அவர் செய்த ப்ரபத்தில் காணப்படாது. ஆனால், அவர் ஸம்பந்தத்தின் உத்தேச்யதையைக் அநுஸரித்து ஞாதாக்கள் அநுஸந்திப்பதுண்டு.

* இவ்விடத்தில் "தத்விஷ்ணோ: பரமம் பதகம் ஸதாபச்யந்தி ஸூர்ய: திவீவசக்ஷுராததம் தத்விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாகும் ஸஸ்ஸமிந்ததே விஷ்ணோர்யத் பரமம்பதம் பர்யாப் யனந்தராயாய ஸர்வஸ்தோ மோதிராத்ர உத்தம மஹர்பவதி ஸர்வயாப்தே ஸர்வஜித்யை ஸர்வமேத்தைத நாப்நோத ஸர்வம்ஜயதி" என்கிற வேதவாக்யத்தை அநுஸந்திப்பது வழக்கம்.

() சாற்றுமுறை பாட்டுகள் இரண்டுதரம் ஸேவிக்கவும்.

(ஜீ) சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் தீர்த்தத்தை எடுத்து ஆசமனம் கண்டருளப்பண்ணி திருப்படிகத்திலே சேர்த்து திருவொற்றுடை சாற்றி கற்பூரநீராஞ்சனம் (12) 'லக்ஷ்மீசரணலாக்ஷாங்க' இத்யாதி ச்லோகாநுஸந்தானத்துடனே திருப்பாவை முதலான ப்ரபந்தம் சாற்றி.

---

(வி) சூழ்ந்தகன்றாழ்ந் துயர்ந்த முடிவில்பெரும் பாழேயோ
சூழ்ந்ததனில்பெரிய பரநன் மலர்ச் சோதியோ
சூழ்ந்ததனில்பெரிய சுடர்ஞான வின்பமேயோ
சூழ்ந்த தனில்பெரிய என்னவா வறச்சூழ்ந்தாயே.

அவாவறச்சூழ் அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவிலந்தாதிகளால் இவை யாயிரமும் முடிந்த
அவாவிலந்தாதி இப்பத் தறிந்தார் பிறந்தாருயர்ந்தே.

உயர்வற வுயர்நல முடையவ னெவனவன்
மயர்வற மதிநல மருளின னெவனவன்
அயர்வறு மமரர்களதிபதி யெவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே.

வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த
மாறன் சடகோபன் வண்குருகூரேறெங்கள்
வாழ்வா மென்றேத்தும் மதுரகவியார் எம்மை
ஆள்வாரவரே யரண்.

கண்ணிநுண் சிறுத்தாம்பு—10 பாட்டும்,

கண்ணிநுண் சிறுத்தாம்பு——தாவுக்கே.

இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ் சோலையென்னும்,
பொருப்பிடம்மாயனுக்கென்பர்நல்லோர் அவைதன்னொடும் வந்
திருப்பி டம்மாயனிராமாநுசன் மனத்தின்றவன்
திருப்பிட மெந்தன் இதயத்துள் ளேதனக் கின்புறவே

இன்புற்ற சீலத்து இராமாநுசா வென்று மெவ்விடத்தும்
என்புற்ற நோயுடல் தோறும் பிறந்திறந்தெண்ணரிய . [சே
துன்புற்று வீயுனும் சொல்லுவ தொன்றுண்டு வுன்தொண்டர்கட்
அன்புற்றிருக்கும்படி என்னையாக்கி யங்காட்படுத்தே.

ஜீ) திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப்பித்து 'திருவடிகள் நிலசாத்தியருளவேணும் பர்யங்காஸனத்துக்கு எழுந்தருளவேணும்' என்று விண்ணப்பம் செய்து பாத்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை யெடுத்து 'ஸ்ரீமதேநம: திருவடிகள் விளக்கியருளவேணும்' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து அர்க்ய பாத்திரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்து 'திருக்கைகள் விளக்கியருளவேணும்'

---

அங்கயல் பாய்வயல் தென்னரங்கன் அணியாக மென்னும்
பங்கயமாமலர்ப் பாவையை போற்றுதும்—பத்தி யெல்லாம்
தங்கிய தென்னத்தழைத்து நெஞ்சே நம்தலைமிசையே
பொங்கிய கீர்த்தி யிராமாநுசனடிப் பூமன்னுவே.

பூமன்னு மாதுபொருந்திய மார்பன் புகழ்மலிந்த
பாமன்னு மாறன் அடிபணிந்துய்ந்தவன் பல்கலையோர்
தாமன்னவந்த விராமாநுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே.

பல்லாண்டு———பல்லாண்டே.

பூருவாசாரியர்கள் போதமநுட்டானங்கள்
கூறுவார் வார்த்தைகளைக் கொண்டுநீர் தேறி
இருள்தருமா ஞாலத்தேஇன்பமுற்று வாழும்
தெருள்தருமா தேசிகனைச்சேர்ந்து.

இந்தவுபதேசரத்தின மாலை தன்னை
சிந்தைதன்னில் நாளும் சிந்திப்பார்—எந்தை
எதிராசரின்னருளுக் கென்று மிலக்காகிச்
சதிராக வாழ்ந்திடுவர் தாம்.

மன்னுயிர் காளிங்கே மணவாள மாமுனிவன்
பொன்னடி யாம் செங்கமலப் போதுகளை யுன்னிச்
சிரத்தாலே தீண்டிலமானவனும் நம்மை
கரத்தாலே தீண்டில்கடன்.

என்கிற பாசுரங்களையும்.

13. ஸர்வதேச தசாகாலேஷ்வவ்யாஹத பராக்ரம
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்ததாம் அபிவர்ததாம்.

ஜீ.என்று விண்ணப்பம்செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து ஆசமன பாத்ரத்தில் நின்றும் உத்தரணியாலே தீர்த்தத்தை எடுத்து 'ஆசமனம்

(வி) ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞாப்ரதி வாஸராமுஜ்வலா
திகந்த-வ்யாபினீ பூயாத் ஸாஹிலோக ஹிதைஷிணீ.

ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாமநுதினம்ஸம்வர்தயா
ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரிய மநுபத் ரவாமநுதினம் ஸம்வர்த்யா.

நமச்ரீசைல நாதாய குந்திநகர ஜன்மனே
ப்ரஸாதலப்த பரமப்ராப்யகைங்கர்யசாலினே.

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த் ரப்ரவணம் வந்தே ரம்ய ஜாமாதரம் முனிம்.

என்கிற ச்லோகங்களையும்;

"வாழி திருவாய் மொழிப்பிள்ளை மாதகவால் வாழும் மணவாள மாமுனிவன் வாழிவன் மாறன் திருவாய் மொழிப்பொருளை மாநிலத்தோர் தேறும்படியுரைக்கும் சீர்,

செய்ய தாமரைத்தாளிணைவாழியே
சேலைவாழி திருநாபி வாழியே
துய்யமார்பும் புரிநூலும் வாழியே

சுந்தரத் திருத்தோளிணை வாழியே
கையு மேந்தியமுந் நூலும் வாழியே
கருணை பொங்கிய கண்ணிணை வாழியே
பொய்யிலாத மணவாள மாமுனி புந்திவாழி புகழ்வாழிவாழியே.

அடியார்கள்வாழ அரங்கநகர் வாழ
சடகோபன் தண்டமிழ்நூல் வாழ கடல்சூழ்ந்த
மண்ணுலகம் வாழ மணவாளமாமுனியே
இன்னமொரு நூற்றாண்டிரும்.

என்கிற பாசுரங்களை ஸேவித்து சாற்றுமுறை செய்து, அனந்தரம் மறு நாளைக்காக பெருமாளுக்கு பரியார்த்தமாக திருமஞ்சனக் காவேரியில் தீர்த்தம் வைத்துவிட்டு, பஞ்சபாத்திரங்களிலுள்ள தீர்த்தத்தை திருப்படிகத்தில் சேர்த்துவிட்டு அர்க்ய பாத்திரத்தில் திருப்படிகத்திலிருந்து தீர்த்தம் எடுத்துக்கொண்டு மூன்று உத்தரணி தீர்த்தத்தை திருப்படிகத்தில் சேர்த்துவிட்டு, மீதியுள்ள

(ஜீ) கண்டருளவேணும்' என்று விண்ணப்பம் செய்து முக்கால் முக்கால் திருப்படிகத்திலே சேர்த்து உத்தரணியை சுத்த ஜலத்திலே சோதித்து திருவொற்றுடை சாத்தி சுருளமுது திருத்தி கண்டருளப்பண்ணி திருப்பவளம் மாற்றி திருக்கைகள் விளக்கி ஆசமனம் கண்டருளப்பண்ணி திருவொற்றுடை சாத்தி திருவடிகளிலே திருக்

---

(வி) அர்க்ய பாத்ர தீர்த்தத்தை *சோஷ்டிக்கு ஸாதித்து தானும்

---

*கோஷ்டிக்கு முதலில் தீர்த்தமா, திருவாராதனம் செய்தவனுக்கு முதலில் தீர்த்தமா என்றால்—பாஞ்சராத்ரம். ஸ்ரீப்ரச்ன ஸம்ஹிதை-29 அத்தியாயம்-165 ச்லோகம்—"ப்ரதிக்ருஹ்ய ஹோதகம் பீத்வா பாதுகாம் மூர்தனிஸ்வகே புக்தாநி பத்ர புஷ்பாணி விதத்யாத் விசயார்விதஃ" என்றும் 168 ச்லோகம் "தர்யம் போஜ்யாஸனே விஷ்ணோஃ பூஜனம் பஞ்சமம் ததஃகுரோச்சித்தி ப்ராசநந்து ஷஷ்டம் நித்யாக்நி பூஜனம்" என்றும் "பூஜாம்தே பூஜகஃ ப்ரதமம்பிபேத்" என்றும் சொன்னபடி யாகபூர்த்திக்காகவும் தன் சுத்திக்காகவும் முதலில் அர்ச்சகன் தீர்த்த ஸ்வீகாரம் செய்யவேணும் என்று சிலர் அபிப்ராயம். பூஜைக்கு அங்கம் சொல்லும் ப்ரகாணத்தில் "ரூரோவித்தி ப்ராசனந்து" என்று சொல்லியிருக்கையாலும், மற்றொரு இடத்தில் "ப்ரதமம் பிபேத்" என்று சொல்லியிருக்கையாலும் திருவாராதனத்துக்குப் பூர்வம் தன் சரீர சுத்திக்காக முன்னிதிய தீர்த்தத்தை ஸ்வீகரிக்கவேணுமென்று தாத்பர்யம். "பூஜாம் தே பூஜகஃ ப்ரதமம் பிபேத்" என்றால்—1 பூஜைக்கு அங்கம் 6-வது ஆஸனமான பர்யங்காசனத்திற்கு அனந்தரம் என்றுவது, (2) பகவதாராதன பாகவதாராதனானந்தரம் (பெருமாள், பிராட்டிமார், நித்யஸூரிகள் ஆழ்வாராதிகளுக்குதிருவாராதனம் சமர்ப்பித்து, பாகவதாராதன ரூபமாகத் தான் சாற்றுமுறை சமயத்தில் கோஷ்டியில், தீர்த்தமும், ப்ரசாதமும் விநியோகிப்பது) என்றுவது பொருள். இதற்கு அனந்தரம் அர்ச்சகன் தீர்த்த ஸ்வீகாரம் பண்ணிக்கொண்டு அனந்தரம் ப்ரத்யேகமாக வருகிறவர்களுக்கு தீர்த்தத்தை சாதிப்பது என்று சிலர் அபிப்ராயம். தீர்த்த பிந்துக்களை கீழேவிட்டால் நரகத்தை யடைவான். தீர்த்தம் மூன்று தரம் ஸ்வீகரிக்கவும், முதல்தரத்தால் தேஹ சுத்தியும், இரண்டாவதால் புண்ணிய வ்ருத்தியும், மூன்றாவதால், மோக்ஷமும் உண்டாகும்.

துழாய் கொழுந்தை 'ஆசார்யன் திருக்கைகளால் ஸர்வோபசாரங் களையும் கண்டருளவேணும்' என்று விண்ணப்பம்செய்து, (14) 'உப சாராபதேசேந' என்கிற ச்லோகாநுஸந்தானத்துடனே தண்டன் ஸமர்ப்பித்து அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டு (15) 'பன்ன காதிசபர்யங்கே ரமாஹஸ்தோபதானகே' என்கிற ச்லோகத்தையும்

(வி) ஸ்வீகரிக்கவும். 0 திருத்துழாயையும் கோஷ்டிக்கு வினியோ கவும்.

## பெருமாளுக்கு பர்யங்காஸனம்.

பெருமாள் திருவடிகளிலே திருத்துழாய் கொழுந்தை ஸமர்ப் பித்து "ஸ்ரீமதேநம: திருவடிகள் நிலைசாத்தியருளவேணும், பர் யங்காஸனத்துக்கு எழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, பாத்ய, அர்க்ய, ஆசமனீயம் ஸமர்ப்பித்து, திருவொற்று டை சாத்தி, திருப்பணியாரம், பழங்கள், சுருளமுது உண்டானல் இவைகளை கண்டருளப்பண்ணி, திருப்பவளம் மாற்றி, திருக்கைகள் விளக்கி, ஆசமனம் கண்டருளப்பண்ணி, திருவொற்றுடை திருப்ப வளத்திற்கும் திருக்கைகளுக்கும் சாற்றி திருவடிகளிலே திருத்து ழாய்கொழுந்தை ஸமர்ப்பித்து 'ஆசார்யன் திருக்கைகளால் சர்வோ பசாரங்களையும் கண்டருளவேணும்" என்று விண்ணப்பம் செய்து, (14) 'உபசாராபதேசேன க்ருதாநஹரஹர்மயா அபசாராநி மான் ஸர்வான் க்ஷமஸ்வ புருஷோத்தம' என்கிற ச்லோகாநு ஸந் தானத்துடனே தண்டம் ஸமர்ப்பித்து அபராதக்ஷாபணம் பண்ணிக் கொண்டு, (15) 'பன்னகாதிச பர்யங்கே ரமா ஹஸ்தோபதானகே

0 'துளஸீ தர்சனம் புண்யம் ஸ்பர்சனம் பாபநாசனம் சிரஸாஸர்வ தீர்த் தானும் உதரே மோக்ஷசாதனம்' திருத்துழாய் பார்த்தால் புண்யம், தொட் டால் பாவங்கள் ஒழியும், சிரஸில் தரித்தால் தீர்த்த யாத்ரை செய்தது போல், வயிற்றில் வைத்தால் மோக்ஷசாதனம். ஆனால் "கர்ணே புஷ்பம் கஸே கந்தம் சிகாயாம் துளஸீதளம் தாரயந்தம் நரம் த்ருஷ்ட்வா சசேல ஸ்னானமாசரேத்" என்ற வாக்யப்ரகாரம் திருத்துழாயை சிரஸில் தரிக் கக்கூடாது என்று தெரிகிறது. "சிரசாசர்வ தீர்த்தானும்" என்ற துளசி யின் ப்ராபவத்தைச் சொன்னபடியே யொழியவேறில்லை. வலது காதில் துளஸியை சிலர் வைத்துக்கொள்வதுண்டு.

'அரவத்த மளியனோடும்' 'உரகலுரகல்' என்கிற பாசுரங்களையும் அநுஸந்தித்து கோயிலாழ்வார் திருக்காப்புசேர்த்து திருமஞ்சன தாழியை பாநீயார்த்தமாக ஸன்னதியிலே ஸ்தாபித்து (16) 'ஜிதம் தே' என்கிற ஸ்தோத்ரானுஸந்தானத்துடன் தண்டம் சமர்ப்பித்து அபராத க்ஷாபணம் பண்ணிக்கொள்ளவும்.

முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸுகம் சேஷ்வ வருஷாதிச ஸுதர்சன ஸுரக்ஷிதம் சங்கசக்ர கதா முக்ய திவ்யாயுத கணஸ்ததா ஸ்ரீச ரக்ஷாபிதானய ஸர்வா ஜாக்ரத ஜாக்ரத' என்கிற ச்லோகத்தையும் 'அறவத்த மளியனோடு மழகிய பாற்கடலோடும் அரவிந்தப்பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து பரவத்திரை பலமோத பள்ளிகொள்கின்ற பிரானை பரம இன்றுன் விட்டுத்தன் பட்டிணம் காவல் பொருட்டே,' உறகலுற கலுறகவொன் சுடராழியே சங்கே அறிவறிநாந்த கவாளே அழகிய சாரங்கமேதண்டே இறவு படாமலிருந்த வெண்மது லோகபா- லீர்காள் பறவைபறை யாவுறகில பள்ளி யறைக்குறி கொண்மின்' என்கிற பாசுரங்களையும் அநுஸந்தித்து, ஆழ்வாராதிகளுக்கும் பர்யங்காஸனம் ஸமர்ப்பித்து, கோயி லாழ்வார் திருக்காப்பு சேர்த்து, திருமஞ்சனத்தாழியில் பானியார்த்தமாக ஸன்னிதியிலே ஸ்தாபித்த 'ஜிதம்தே' என்கிற ஸ்தோத்ரானுஸந்தானத்துடனே தண்டம் சமர்ப்பித்து அபராதக்ஷாபணம் பண்ணிக்கொள்ளவும்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

குறிப்பு:—ஸாயங்கால திருவாராதனம் இருந்தால் :—

காலையில்.—ஸபர்யாஸன, ஸ்நாநாஸன, அலங்காராஸன, போஜ்யாஸன, மந்த்ராஸனங்கள் 5-ம்

ஸாயங்காலங்களில்.—ஸபர்யாஸன, அலங்காராஸன, போஜ்யாஸன, மந்த்ராஸன, பர்யங்காஸனங்கள் 5-ம்.

ஸ்ரீஜயந்த்யாதிகளில்.—காலையில் கீழ்சொன்ன மாதிரி. ஸாயங்காலத்தில் 6 ஆஸனமும் உண்டு. ஆனால் ஸ்நாநாஸனத்தில் தந்த தாவனம் முதலான ப்ராதகால உபசாரங்கள் அனாவச்யம். இதே மாதிரி ஊஹித்துக்கொள்ளவும்.